## ஞூல்செய்தற்குக்காரணம்.

கலிநிலைத்துறை.

பொருவில்கச்சியம்புராணம்வண்டமிழினிற்புகலென்
றிருவிலம்புகழ்மணிமதிற்கச்சியேகம்பர்
றிருவருட்குரியான்றவர்கூறியசிறப்பா
லுரிமையுற்றெழுமாசையாலுரைத்திடலுற்றேன். ௧

## அவையடக்கம்.

மாயைகாரியவுருக்களுமெம்பிரான்வடிவ
மாயவேல்லைவயருண்மயமாகுமற்றதுபோற்
பேயனேன்பிதற்றுரையுமேகம்பர்தம்பெருமை
தூயகாதையுள்ளுறுதலாற்றுகளறத்தோன்றும். ௧

இழித்தசொற்புணர்த்தெளியனேனியம்பியகவியுங்
கழித்தவைவகையிலக்கணவழுவுக்குக்காட்டாப்
பழித்திடாதெடுத்தாளுவர்பல்வகைச்சுவையுங்
கொழித்தநாவினராகியவழுத்தபுகுணத்தோர். ௨

எழுத்துப்போலியுமெழுத்தெனவாளுவரதுபோற்
புழுத்தநாயினேன்பிதற்றியசெய்யுட்போலியையும்
பழுத்தகேள்வியோர்கைக்கொள்வரென்பதுபற்றி
விழுத்தநாணினேன்சிவகதைவிளம்புதற்கிசைந்தேன். ௩

நெறிவழாவுமைபூசனைபோனெறிபிறழ்ந்தோ
னெறிதருங்கலுங்கைக்கொளுங்கச்சியெம்பெருமாற்
கறிவின்மேலவர்காப்பியப்பனுவல்போலறிவின்
குறியிலேன்கவிப்புன்சொலுங்கொள்வதுவழக்கால்.

அவையடக்கமுற்றிற்று.

## நூற்சிறப்புப்பாயிரம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அருட்பணிக்குரியமகேச்சுரர்முதலாநால்வருந்தருகவென்றறைய
மருட்பகைதவிர்க்குங்காஞ்சிமான்மியத்தைவழங்குதென்மொழியினுரைத்தான்
கருப்பகையிரிக்குஞானமுமேனைக்கலைகளுங்கரிசறப்பயின்ற
மருப்பொழிலுடுத்தவாவடுதுறையில்வாழ்சிவஞானமாதவனே.

நூற்சிறப்புப்பாயிரமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௨௭.

# திருநாட்டுப்படலம்.

## நாட்டுவாழ்த்துத்துறை.

கலிநிலைத்துறை.

பணங்கொள்பாம்பணிகம்பனார்பணிவரப்பயந்த
வணங்கினோடொன்றுமமர்ந்தினிதரசுவீற்றிருக்கு
முணங்கரும்புகழ்க்காஞ்சியையகந்தழீஇயும்பர்
வணங்கமேவரும்பாண்டிநாட்டணிநலம்வகுப்பாம். ௧

## மழைவாழ்த்துத்துறை.

கடல்கடைந்திடச்செல்லுறூஉம்வெள்ளைமால்கடுப்பப்
படலைவெண்முகில்பரவைநீருழக்கிவாய்மடுத்து
விடமெழுந்தெனமீண்டவம்மாயனைவிழைய
வுடல்கறுத்துவிண்ணெறிப்படர்ந்தொய்யெனமீண்டு. ௨

அற்றைஞான்றுமால்கயிலையைச்சரணடைந்தாங்குப்
பொற்றநந்தியஞ்சாரல்சூழ்பொருப்பினைக்குறுகிக்
கற்றைவார்சடைச்சுந்தரன்கடவுளான்மதுரை
முற்றுநான்முகிலெனவரைமுழுவதும்பொதிந்து. ௩

முரிந்தவெண்டிரைக்கருங்கடன்முகட்டினைக்குழித்து
விரிந்தவெள்ளநீர்மடுப்புழிக்கரந்துடன்மேவிக்
கரிந்திடத்தனைச்செய்ததீவடவையின்களவைத்
தெரிந்துவில்லுமிழ்தடித்தெனத்திசைதொறுஞ்சிதறி. ௪

கான்றவக்கனன்மீட்டடையாவகைகருதி
வான்றனிற்குனிசிலையெனத்தடையினைவயக்கி
யேன்றநீயினியெதிர்த்தனையாயிடினின்னை
யூன்றனோடுயிர்குடிப்பலென்றுருமொலியெழுப்பி. ௫

அடுத்தடுத்தலைமோதுதெண்டிரைப்புனலளக்க
ருடுத்தபாரிலுன்கிளையெலாமுதலறவொருங்கே
படுத்துநின்வலிபாற்றுவன்யானெனப்பகைமை
தொடுத்தவெஞ்சினங்கொண்டழன்மேலமர்தொடங்கி. ௬

விச்சைமந்திரவலியினால்வீங்குநீர்மழையை
வச்சிரக்கணையாக்கிமெய்வளமெனக்கருளும்
பொச்சமின்மறைவேள்வியும்புனிதனேந்தழலு
மெச்சமாகமற்றவையுமீண்டறக்கெனவியம்பி. ௭

## மழைவளம்.

காட்டகங்களுங்கழைநரல்கதிர்மணிச்சிமயக்
கோட்டகங்களுங்குளிர்புனற்கழனிசூழ்குலவு
நாட்டகங்களும்பரன்முரம்படுத்தெரிகடஞ்செய்
மோட்டகங்களுமுழுவதுங்குளிர்கொளச்சொரிந்து. ௮

இற்றொழிந்தனவொழியுமற்றெஞ்சியவெரிபோய்க்
கற்றவேதியர்வேள்வியஞ்சாலையுட்கரப்ப
வுற்றவாகண்டுதன்சினக்கனலையுமொருவி
வெற்றிமாமுரசெனமறைப்பேரொலிவிளக்கி. ௯

தனதுநீர்த்தியுந்திறற்பிரதாபமுந்தரைமே
லனல்செய்கோபமுமுல்லையுமென்வெங்குழமைத்துப்
புனிதமாமுனைவுதன்னுளையும்பொதிந்துகொண்டென்னப்
பனிவிசும்பினிற்சிவந்துவெண்ணிறம்படைத்தன்றே. கO

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உடுவணிகுடுமிக்கோடுபிளவுபட்டிடையப்பெய்யுங்
கொடுமழைக்காற்றுந்தங்கட்குளிர்பெயன்மாறவெண்ணி
நெடுமலையெடுத்துக்காட்டுகெட்டிதழ்க்காந்தட்கொள்ளி
விடுசுடர்க்கனலியர்தப்புனலெடும்வீந்ததன்றே. கக

போதமேலாகப்பண்டேபுல்லியமலநோய்தீர்ந்தும்
வாதனைதாக்குமாபோன்மழைப்பெயன்மாறித்தீர்ந்தும்
காதல்செய்துறையும்புள்ளுமாக்களுங்கவன்றுநெஞ்ச
சோதகமரங்களெல்லாநுண்டுளிதுவற்றுமாதோ. கஉ

கனைபெயலெழிலிக்கூட்டங்கலிவிசும்படுபோழ்ந்த
நனைமுடிநந்திக்குன்றநளிபடப்பெருழியுந்தெண்ணீர்
புனைமறைவசிட்டமேலோன்செருத்தலான்பொழிந்ததீம்பால்
வனைபுகழ்வெள்ளமென்னத்திசைதொறும்வழிந்தமன்னோ. கங

பாலியாற்றுவளம்.

கண்ணகன்குடுமிக்குன்றிற்கல்லெனக்கறங்கியார்த்து
விண்ணிவரேணியென்னவியன்முடிதொடுத்துவீழுந்
தண்ணறுவருவியெல்லாந்தலைத்தலைவிரிந்துதோன்றும்
புண்ணியப்பாலியாற்றிற்சேர்ந்துடன்போயமாதோ. கச

பாரிடங்குழித்துவீழும்பல்வயினருவியெல்லா
மோரிருமபாலியாற்றினொருங்குசென்றணையுந்தோற்றஞ்
சீரியபுவனந்தோறுஞ்சிதறியவினைகளெல்லா
மோரிடத்தொருவன்றன்பாலுடங்குசென்றுறுதல்போலும். கரு

விலகிவீழருவித்தாரைவேறுவேறாகவோடிக
குலநதிப்பாலிவைப்பினேகமாய்க்கூடுந்தோற்ற
மலகில்பல்வழியுமூதாரணிமையினொன்றுமாறும்
பலபலமதமுமீற்றிறொருவழிப்படலும்போலும். கசா

மலைநகைத்தனையகாட்சிவயின்வயினருவித்தாரை
சிலையினின்றிழிந்துமண்மேற்றிரண்டுசென்றணையுந்தோற்ற
முல்லைவயோடிகலிச்சேடனுயர்வரைக்குடுமியெல்லாம்
பலதலைவிரித்துப்பொத்திக்கிடந்தவப்பான்மைபோலும். கஎ

குரைபுனற்றெண்டைநாட்டைக்குறும்பெறிந்தடிப்படுத்துப்
புரைதபநடாத்துகென்றுப்புதுமுகிலரசனுந்தி
வரைமிசையிருந்துவேந்தாமணிமுடிசூட்டியுய்ப்பத்
திரைபடுபாலிவல்லேசிலையினின்றிழிந்துபோந்து. கஅ

அரசுகள்சூழ்ந்துசெல்லவருங்கணிமலர்வாய்விள்ளச்
சரிகுழற்குறமின்னார்கள்பற்பலதானைவெள்ளம்
விரவிடப்பரியகாலாண்மேதகுமாக்களுந்தி
யிருபடைதழுவிப்போதவிகல்கொடுவையமூர்ந்து. கக

அணிவகுத்தெழுந்துகுன்றரும்பெறற்குறிச்சிபுக்கு,
மணிவகையாரம்பூண்டுமெதுக்குடவிருக்துமாக்கித்
தணிவறவெளிக்கொண்டேகித்தலைத்தலைவேட்டம்போகித்
துணிபடமாக்களெல்லாந்தொலைத்துடனீர்த்துச்சென்று. உ0

கலிவிருத்தம்.

மண்டமர்மேல்கொடுவெந்தனழின்னே
தண்டகநாட்டுறைதாபதர்நோயோர்
பெண்டிருநம்மரணைகுதிர்பெட்டென்
றெண்டிசையார்ப்பவிசைப்பறைசாற்றி

இருற்றிகிரிப்படைதாங்கியிபக்கோ
டுருத்திறல்வெஞ்சிலைகாந்தளரும்பு
நருப்பயில்கோலெனவேந்திகல்வீர
மருப்பகைமாய்த்துறவெட்சிமலைந்து. உஉ

முல்லையின்வேந்துமுடித்தகரந்தை
யொல்லையலைத்துயராணிரைபற்றி
மெல்லிதழ்தின்றுசிவந்தெழுவேய்த்தோ
ணல்லவர்கற்பையழித்துநடந்து. உ௩

வஞ்சிமலைந்தழலைபரலையவாட்டி
யஞ்சியிடாதுதன்னுனையிருக்கி
யெஞ்சலுறுமருதத்திறையோடும்
வெஞ்சமரேற்றுழிஞைத்துணர்வேய்ந்து. உ௪

தடுத்தெதிர்நின்றதடங்கரையெல்லாம்
படுத்துமதன்பயிலபாசறைவீட்டி
மடுக்குளமேரியின்வாட்டமனைத்துங்
கெடுத்தனனென்றுதழீஇக்கிளர்வுற்று. உ௫

வீறியடாவகைவெஞ்சிறைகோலித்
தூறிடுமெள்ளர்தொலைந்தழிவெய்தச்
சீறியடர்ந்துதெழித்துமுள்வேலி
கீறிவளைந்துகிடங்கினைநீங்கி உ௬

நொச்சியைமுற்றியநொச்சியினுள்ளார்
பச்சிளநொச்சிபறித்தணியாமே
நச்சியதும்பைநறுந்துணர்சூடி
யச்செருமாமதின்முற்றுமகழ்ந்து. உஎ

கொச்சகக்கலிப்பா.

இடித்துவெளிசெய்துககரெங்கணுநுழைந்தாங்
கடுத்தமடவார்வயிறலைத்தனரிரங்கக்
கொடுத்திடுவளங்கள்பலகொள்ளைகொடுமெண்ணி
னெடுத்துவருவெள்வரகுகொள்ளுடனிறைத்து.

வெற்றிபுனைமாலிகைமிலைச்சியிருபாலுஞ்
சுற்றிவருபுட்குலநிரைத்தொழுகிதன்னுற்
கொற்றமிகுமுர்கவியைகோக்கியறைகூவி
யெற்றுகழிகெய்தல்வழியெய்துறுதலோடும். உ௮

பௌவமதுணர்ந்துபவளந்தாளமாதி
வௌவுதிரையேந்தியெதிர்கொண்டடிவணங்கச்
செவ்விதினுவந்தபயுமீந்துதினமாறிக்
கௌவியமெய்யுன்பொடுகலந்துளதையன்றே. ௯௦

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தன்னடிப்படுத்துமேலைத்தண்டகாடுமுற்று
முன்னுறக்கவர்ந்துகொண்டவளத்தினுழைவிரட்டி
பின்னுறவளித்துவானிற்புலவரும்பெட்குமாற்று
லங்கிலேயுயிர்களோம்பியரசுசெய்துறையும்பாலி. ௯௧

காரணப்பொருளின்றன்மைகாரியத்துளதாமென்ன
வாரணப்பனுவல்கூறுமரும்பொருடெளியத்தேற்றும்
பேரிசைப்புவிமேல்யார்க்கும்பெட்டனபெட்டவாறே
சீரிதிற்கொடுக்குந்தேனுத்தரவருஞ்செழுநீர்ப்பாலி. ௯௨

வறுமையுற்றழியுந்தொண்டைவளமலிநாட்டோர்தங்க
ளிறுமுடல்வருத்தியேனுமீவதற்கொல்காரற்றே
தெறுகதிர்கனற்றும்வேனிற்பருவத்துஞ்சீர்மைகுன்று
துறுமணலகடுகீண்டுமொண்புனலுதவும்பாலி. ௯௩

சொற்றவித்தீர்த்தமேன்மைசுவைபடும்பாலோடொக்கு
மற்றையதீர்த்தமெல்லாம்வார்தருபுனலோடொக்கும்
பெற்றிமையுணர்ந்துதொல்லோர்பெயரிடப்பட்டசீர்த்தி
பற்றியதெனலாம்பாலிப்பெருமையார்பகருநீரார். ௯௪

## நாட்டுவளம்.

கலிநிலைத்துறை.

விளம்புமித்தகைமணிகொழிவிரிதிரைத்தரங்க
வளம்புனற்றடம்பாலியான்வண்மைபெற்றோங்கி
யுளம்பயின்றுநாற்பொருள்களுமுஞற்றுநர்க்கிடமாய்த்
துளும்புமேன்மையிற்பொலிந்ததுதொண்டைநன்னாடு. ௯௫

செக்கர்வார்சடைச்சிவபிரான்றிருவருள்செய்யுத்
தக்கவாய்மையினுயிர்க்கெலாந்தன்னிடத்திருந்து
மைக்கணெம்பெருமாட்டியெண்ணான்கறம்வளர்க்குந்
தொக்கமாப்புகழ்படைத்ததுதொண்டைநன்னாடு. ௯௬

பவம்விளைத்திடாப்பெரும்பதியெனத்திசைபோய
சிவம்விளைத்திடுநகரங்களேழுளுஞ்சிறந்து
தவம்விளைத்திடுகாஞ்சியைத்தன்னிடத்திருத்தி
நவம்விளைத்திடும்பெருமைபூண்டதுதொண்டைநாடு. ௯௭

தரைவிளங்கியதண்டகாட்டினிற்றகைசால்
வரையுங்கானமும்புறம்புணைப்பழனமுமணிநீர்த்
திரையும்வேலையுமென்னுகானிலத்தினுட்சிறந்த
புரையிலேங்கிணைவளஞ்சிறிதறிந்தவாபுகல்வாம். ௯௮

## குறிஞ்சி.

முருகவேட்கிடுதுமமோம்புறழுளியகில்சந்
துருவவாரமுறப்பெய்துபுன்பயிர்விளைத்துவப்பார்,
பெருவளந்துறந்தார்தொறுழிபெறுதிபேணும்
பொருவில்வாழ்க்கையர்தஞ்செயல்போன்மெனப்பொருப்பர். ௯௯

ஏறுதன்னுடல்வருத்தியபகைமையெண்ணுது
நூறுபன்மணிமாமுதல்பொறையெலாந்தொலைத்த
வேறுநன்றியேகடைப்பிடித்திறைவியன்பொருப்பர்க்
கூறுநல்வளம்விளைத்திடுமுயர்ந்தவர்செயல்போல். ௬௦

வேட்டைமேற்புகுவார்க்குநல்வினையுந்தமடவார்
கூட்டமுழ்வாய்க்குழச்சாரலிற்றினைக்குரற்கொய்துஞ்
சேட்டிளங்கிளிக்குலங்களைத்தெரிவைமாரோப்பும்
பாட்டிசைத்திறமொழியிருந்தனுதினம்பயிலும். ௬௧

நங்குலத்தருவாழ்க்கையைக்கெடுத்துநம்மிருக்கை
தங்களுக்கெனக்கொண்டவிவ்வேனல்கடம்மை
யிங்கண்வாட்டுதுமென்பதோர்சூழ்ச்சியெண்ணியுபோ
லங்கணெஞ்சியவேங்கைகள்போர்துசெய்தலரும். ௬௨

என்னையூர்ந்தருள்சுடர்வடிவேலயவேற்பெருமான்
றன்னைநன்மருகெனப்படைத்தவன்றனதூர்தி
யன்னதாமெனுங்கேண்மையானளிமுகிற்குலத்தைக்
கன்னிமாமயில்கண்டொறுங்களிசிறந்தகவும். ௬௩

நெருங்குபைந்தழைவருக்கைமேனெடுவெளியலைப்ப
வருங்கண்மாமயில்வீற்றிருந்தசைதருங்காட்சி
கருங்கண்வீரச்செம்மறன்மருகனைக்காண
மருங்குவந்துதன்னூர்தியையிருவுதன்மானும். ௬௪

சந்துமாமுழந்தாங்கிவம்பலர்ந்ததண்குவட்டான்
மைந்தர்கண்ணையுமனத்தையுங்கவர்ந்திடும்வனப்பின்
முந்துமோங்கலுங்கொடிச்சியர்குழக்களுமுகிறோய்
கந்தமார்குழமுகத்தலரிலவங்கங்காட்டும். ௬௫

கொங்கையேந்தியவர்ணகளுமவணகொம்புடைய
துங்கவேங்கையின்குலமெலாமவணபரல்சுரந்து
பொங்குநீடுசேவின்ங்களுமவணவான்புனலை
யங்கண்வேட்டுணுமொற்றைத்தாளொகினமுமவண. ௬௬

ஆணைலாமொருகன்னியையுமணப்பவூனையுங்
கோணைவேங்கைகள்யாட்டினையிறவுகொண்டோங்கும்
பேணுசேவினஞ்சிங்கமேலேறிடும்பிழையா
தேணினுற்பொலியெகினங்களிடபத்தைவிழுங்கும். ௬௭

வில்லலர்ந்தபல்லுடுக்களும்விண்ணெறிப்படருஞ்
செல்லும்வெண்கதிர்க்கடவுளும்பானுவுந்திறல்சான்
மல்லல்வானவக்குழுவுமெய்ப்பாறவந்திருக்கு
மில்லமெங்கணும்வான்றொடவிழைத்திடுங்குன்றம். ௬௮

போதுமூன்றினும்போதுசெய்காவிசூழ்பொருப்பு
மேதகுந்தமிழ்த்தொல்லையாம்வேங்கடவரையுங்
காதல்பூப்பவத்தாணிகொண்டறுமுகக்கடவுள்
கோதுநீத்தரசாட்சிசெய்குறிஞ்சியக்குறிஞ்சி. ௬௯

அன்பெலாமொருபிழம்பெனத்திரண்டகண்ணப்ப
னெம்பிராற்கொருவிழியிடந்தப்புகாளத்திப்
பொன்பிறங்கியமுகலிசூழ்கயிலையம்பொருப்புந்
தன்புலத்திடையுடையதுதடவரைக்குறிஞ்சி. ருo

காவனமன்னவர்க்கிரந்துசோறளித்திடுமெம்மான்
றேவியோடமர்திருக்கச்சூர்திருவிடைச்சுரமும்
பாவகாரியரெய்தொணுக்கழுகுசூழ்பறம்பு
மேவரத்திகழ்குறிஞ்சியின்பெருமையார்விரிப்பார். ருக

பாலை.

சூராவளித்திடுபாவையைக்கோங்குபொன்கொடுத்துப்
பராரைப்பாடலம்பூந்தழப்பாங்கரின்மணப்ப
மராமரத்துளர்வண்டுபண்பாடவன்முருங்கை
விராவிவெண்பொரியிறைத்திடும்வியப்பினதொருபால். ருஉ

எயிற்றிமாரெழினலத்தினுக்கிரியல்போயுடைந்தாங்
கயற்பொதும்பர்புக்கலர்குராப்பாவைகண்டவர்தங்
துயிற்றுசேயெனக்கவன்றுபோய்த்தாதுணம்புறாக்கள்
வெயிற்றலைக்கணின்றுயங்குவநிலைமைவிண்டவர்போல.

தாதுணம்புறவினமெலாந்துணையுடன்கெழுமிப்
போர்தலூடியுமுணர்த்தியந்தலைத்தலைப்புணர்ந்து
காதலங்கலார்மொழியையுங்கடந்துசேணிடைச்செ
லேதிலாடவர்தமைச்செலவழுங்குவித்திடுமால். ருச

வெங்கதிர்ப்பிரானன்பகம்போதிவிலிவேனில்
மங்கைகொங்கைநோய்க்குளித்திடும்பாலையாமைந்த
னங்கணுனிலவரசர்பாலிரந்துவந்முரம்பு
தங்குசூழலிற்சிற்றரசான்வருமுளதால். ருரு

முல்லை.

கவிலுமிந்நிலப்புறம்பயில்புறவகன்மடந்தை
குவிவருந்தழல்வெம்மைகூர்கொடும்பசிதணியச்
செவிலியாய்முகிறீம்பயமூட்டிடவளர்ந்தாங்
கவிழுநீள்வரகாதியாமைப்பயந்தளிக்கும். ருசா

கொல்லையெங்கணுங்கொழுமலர்தகைபுனமுருக்கின்
முல்லைமென்கொடிபடர்ந்தலர்நிரைநிரைமுகிழ்ப்ப
வல்லைவென்றகந்தரப்பிரானரகத்திமார்பிற்
றொல்லைவெண்டலைமாலிகைதுயல்வரன்மானும். ருஎ

நீலம்பூத்தலர்பூவையைக்கோட்டுநீள்கரத்தாற்
கோலம்பூத்தபொற்கொன்றைகட்டிஇக்கிடந்தசைவ
வாலம்பூத்தருண்மிடற்றினோனென்றுமோகினியாஞ்
சீலம்பூத்தமாவிளமுலைதிளைப்பதுதெளிக்கும். ருஅ

பெண்ணலங்கனியிடைக்குலப்பிடிநடைமடவார்
விண்ணலங்கனிமாதரையெழிலினல்வென்று
பண்ணலங்கனிமிடற்றவர்பணைத்தமுக்கரிந்து
மண்ணிலெங்கணுந்தூக்கிவைத்தெனக்குமிழ்மலரும். ருகூ

மௌவலங்குழலார்விழிக்குடைந்துவான்குதிக்கு
நவ்விமீண்டகலாவகைமகளிரானனத்துக்
கௌவுறுதவராணையிற்றியுமென்மதிகண்
டவ்வுழித்தனதிருக்கையிற்சிறைப்படுத்தலைக்கும். சo

கற்றைவார்குழலாய்ச்சியர்கயல்விழிமுகத்தின்
பெற்றியொப்புறப்பெருங்குருந்துச்சிமேற்றுவி
யொற்றைமானுடைக்கலைமதியதனிழலுறங்கு
மற்றைமானையும்பற்றுவான்கதிர்க்கையால்வருடும். சக

நலம்பயின்றிளவேனிலின்விழுமாங்குயில்க
ளலம்புகார்வரும்போதுவாயடைப்பதுமுன்னுட்
புலம்புகொண்டவர்காரொடுந்தலைவர்தேர்புகுத
வலம்புனைந்துரைவளமொழிக்கிடைதலானன்றே. சஉ

தொண்டைமான்கடக்களிற்றினைமுல்லையாற்றொடக்கி
யண்டர்தம்பிரான்வெளிப்படக்காட்சிதந்தருள்சீர்
கொண்டவான்பதிமுதல்பலதன்னிடைக்குலவக்
கண்டமுல்லையின்பெருமையார்கட்டுரைத்திடுவார். சங

## மருதம்.

பொலஞ்சிறைச்சுரும்புளர்கருங்குழுஞ்சுனைப்புறவ
நிலந்தனைப்புடையுடுத்ததுநெட்டிளவாளை
யிலஞ்சிநின்றுமீப்பாய்ந்துவெண்மதியிழிதேற
லலங்கொள்வானியாற்றுலவுபூம்படப்பணைமருதம். சச

ஒருவனாகியசிவபிரானுலகுயிரளிப்பக்
கருணைகூர்ந்துதன்னுவந்திருமேதழுங்காட்டுந்
திருநிகர்ப்பவோர்பாலியேவயலெலாஞ்செறிப்பப்
பெருகுதண்புனல்பற்பலகாலகளாய்ப்பிரியும். சரு

பராரைமூலமேற்பணைகிளைவளர்மரனைப்பலவும்
விராவியொன்றிலொன்றனந்தமாய்க்கவடுவிட்டென்னத்
தராதலம்புகும்பாலியிற்பிரிந்துதன்கரைக்க
ணராவுகால்களுமவைதருகால்களுமனந்தம். சசா

நான்முகப்பிரான்வேள்வியைத்தபவுருத்தியை
மான்மறத்திடைக்குலையுணக்கிடந்தமைமான,
மீன்முகப்பெருங்காற்புனறட்டவிழ்ந்துழக்கும்
பான்முலைக்கருமேதியாற்பருமடையுடையும். சஎ

பழங்கண்வேனிலைப்புயல்கொடுபோற்றுதன்னிறைக்குந்
தழங்குமோதையின்மிருதம்வீழ்த்தெடுப்பதுதனைய
வழங்குதண்ணுமையோதையுமள்ளரார்ப்பொலியு
முழங்குதீம்புனற்கம்மையுமுடுகிவிண்புகுமால். சஅ

பொறிகளைந்தையும்புறஞ்செலாதடக்கியோர்நெறிக்கே
குறிகொளும்படிசெலுத்துபேராளர்தங்கோள்போற்
பிறிவுறும்பலமடைகளிற்பிழைத்திடாதொதுக்கிச்
செறிதரும்புனன்முழுவதுமகன்பணைசெறிப்பார். சகூ

பழியினீங்கிஎன்கீட்டியபசும்பொருள்சிறிதுங்
கழிபடாதுநல்வழிப்பயன்படுவதுகடுப்பக்,
கொழிதிரைச்சுவைப்பாலியின்குளிர்புனன்முழுதும்
வழிவுறுதுகால்வழிச்சென்றுவளவயனிறைக்கும். ௭௦

தண்ணங்கன்புவிமுழுதுமாங்கடுங்கொலேயவுண
னண்ணன்மார்பகம்பிளப்பவர்போலவிர்மணியின்
வண்ணவன்கடாநிரைநிரையாத்துவன்படையாற்
பண்ணேதோறுநின்றுழுநர்கம்பலேகளேயெங்கும். ௭௧

மருவுசாறுறும்வெருவிமுன்குதித்தெழுவாளே
யிருமருப்பிடையுந்தைந்துழுமெருமையைத்தடுக்கும்,
பருவராற்குலமொய்யெனப்பாய்ந்தெழுந்தலேக்கு
முருவவாற்புறத்திறைந்துவல்விரைந்தெழவுந்தும். ௭௨

பூண்டவன்கொடுந்தானவனைக்கைபோழ்ந்திடலுங்
காண்டகும்புவிநன்னிறங்காட்டியதென்னக்
கீண்டசாறுறுங்கேழ்கிளர்தமனியங்கிடந்து
மாண்டபேரொளிவயங்கிநீள்கனேயிருண்மேயும். ௭௩

வேறுசெய்துபின்பொருத்துறும்வினைவலவமைச்சிற்
கூறுசெய்ததன்சேறெலாங்குழப்பியொன்றுக்கிச்
சாறுசெய்துவர்சவற்றுழுதுழுமிடர்தவிர்த்து
நாறுசெய்கெனவென்முளேயித்துவர்நாளால ௭௪

அருள்விளங்கலுமுடல்பொருளாதியபுந்தந்
தருமவன்புடையெய்துறக்கொடுத்திடுந்தகைபோற்,
பெருகயாத்தநீர்க்கலங்கல்போய்த்தெளிந்தபின்முழுது
மருவுகால்வழிவடிந்துறக்கவிழ்ப்பர்கண்மள்ளர். ௭௫

கலிவிருத்தம்.

இளமகப்பசிதனக்கேந்துகொய்சைப்பா
லளவறிந்தூட்டுதாய்மானவாறறி
களமர்கணமுளேபடுனல்செவ்விகண்டுநீள்
வளவயல்பாய்த்தித்தம்மகவினேம்புவார். ௭௬

ஓரிடத்துயிர்த்ததன்பறழையோம்புவான்
பாரிடைப்பல்வயினுய்க்கும்பூனைபோற்,
காருடற்களமர்கைந்நாறுவாரிப்போய்ச்
சீருடைப்பணேதொறுநடுதல்செய்வரால். ௭௭

மரகதந்தளிர்த்தெனவளர்பைங்கூழ்செறி-
தரநிறைகழனியுட்சங்கமூர்வன,
பரவைநீர்மேய்ந்தெழும்படலேக்கொண்டலுட்
சரமதிநுழைந்துசெல்காட்சிசாலுமால். ௭௮

களமர்கள்களேகளேபருவங்கண்டிலு
மிளமயில்வயல்வளங்காணவெய்தியாங்
குளமகிழ்கூர்தரவுழத்திமாரெலாம்
வளமலியணேதொறும்வந்துமுற்றுவார்.

அம்புயமுற்பலமாம்பலாதியாம்
பைம்புதற்களையறப்பறித்ததம்முருக்,
கொன்புனற்றேன்றலுங்கொய்த்புன்களை
பின்பினுமுளைப்பதென்பெயர்த்தென்பார்சிலர். ௮௰

பங்கயமாம்பலுற்பலத்திற்றேனுண்டு
தங்கியவண்டினந்தமதுவாண்முகஞ்
செங்கனிவாய்விழிசேர்ந்துமூசுற
வங்கவைகட்டெட்டிரிந்தகற்றுவார்சிலர். ௮௧

பாயிதழ்த்தாமரைபறித்தல்கொப்புமை
யாயுநம்ரணமுகஞ்சேர்ந்தியைத்தேன்
வாய்மடுத்திளையிலமதன்றுமாற்றல்போன்,
மீயுயர்கரைப்புறம்வீசுவார்சிலர். ௮௨

இணைவிழிக்கிணையிலையென்பதன்னையி
னணுகிங்காண்மினவ்வுரைத்துககாட்டல்போற்,
பிணையுநாசியிலெதிர்பிடித்துமோந்துதேன்
றணிவிலுற்பலமுடிசார்த்துவார்சிலர். ௮௩

சைவலங்களைகுவான்குனியத்தாழ்குழ
லெய்தியெம்பினத்திணையொரேன்மினென்பபோற்,
கைமிசைவிழுந்துசிக்குண்ணகாளிமிர்த்
தையபூங்குழன்முடித்தணைகின்றார்சிலர். ௮௪

நறுமலர்ப்பங்கயங்களையநாரியர்
கறுவொடுமுள்ளரைக்காம்புபற்றலுங்
தெறுகரங்கிழியப்புண்செய்யுமேதமக்
கிறுதிசெய்வார்க்கெவரிடரிழைத்திடார். ௮௫

அலமருவிழியினமாமெனுமுக
மலர்மிசைப்பாய்தருகயலுமாண்டதன்
குலமெனப்புறவடிகூடுங்கூர்மமு
மிலவிதழ்கடைசியரெளிதிற்கைக்கொள்வார். ௮௬

பறிதரக்களுந்தெறிபாவைமாரையம்
மறிபுனற்குவளைகால்வளைத்துப்பாம்பெனப்
பொறிவெருவுறச்செயும்புடைப்பின்மொய்ம்பிலாச்
சிறியருந்தம்மினுந்தீங்கிழைப்பரே. ௮௭

களிபடுசுரும்புளர்கமலக்கஞ்சமு,
நளிபடுகுவளையுநனைகொளாம்பலும்,
தளிரியற்கடைசியர்முழுதுஞ்சாடுவா
ரளிமருவலர்க்கெவரன்புசெய்குவார். ௮௮

புரைதபுபசும்பயிர்ப்பொலிவுங்கெடுதலா
நிரைநிரையிடந்தபுன்னிறத்தபூக்களும்,
வரைதவிழ்முகில்களும்வானவிற்களுந்
தரையிடைப்பயன்பெறச்சார்ந்ததாக்குமால். ௮௯

இருண்முகிலுறழ்பயிரிடையெலாந்தடித்
துருகெழவயங்கியாங்குலவுழந்நலார்
திருமலர்ப்பதமெல்லப்பெயர்த்துத்தேங்குழற்
கருஞ்சிமிழார்த்தெழக்கரையிலேறுவார். ௯௰

தெறுங்களைகட்டநீர்ச்செறுவிற்பண்டுபோ
னறுங்களம்போருகச்சேக்கைநாடிவந்
துறுங்களியோதிமமுயங்கிவாடுவ
வறுங்களநாடியுண்மறுகுமாந்தர்போல். ௯௧

கொள்ளைபோய்நனிவறங்கூர்ந்தகாலையும்
வள்ளியோர்விருந்தினர்வாடக்காண்பரோ,
கள்ளுகுமலர்வளமிழந்துங்கார்வயல்
வெள்ளனமகிழமீன்விருந்துநல்குமால். ௯௨

மண்ணகமகளிர்கைவண்மைகண்டயாம்
விண்ணகமகளிர்கைமேன்மைகாண்டுமென்
றெண்ணிமேற்சேறலுமென்னவான்பயிர்
கண்ணிறைகவின்செழித்தோங்குங்காட்சித்தே. ௯௩

கொச்சகக்கலிப்பா.

ஈன்றெடுத்தோர்குணமுகவுகிலையுமுறைப்படிவிதந்திற்
றோன்றுமுளைமுனைவிளர்த்துப்பின்பசந்தொடர்பி
லான்றசெழுங்கதிர்களுமுன்றுவெள்ளையாயெழுந்து
மான்றமீரகதமேனிவாய்த்துமடலவிழ்த்தெழுமால். ௯௪

வரமகளிரங்கைவளமறிபாக்குமேற்போந்து
திரையெறிநீர்க்கடல்வரைப்பிற்றெரிவையர்கைக்கிணையொவ்வா
மரபுணர்ந்துமீண்டென்னவானோக்கிக்கதிர்த்தெழுந்த
பரவுபுனற்றடஞ்சாலிபார்நோக்கியிறைஞ்சுமால் ௯௫

பேதைமையிலாடவர்முன்வளைவின்றிப்பெதுமபைமையின்
மேதகச்சூழ்ந்தெனவணங்கிமங்கைமையின்மிகநாணு
மாதரைப்போற்பைங்கூழின்மன்னமினைதிர்கதிர்த்தெழுந்த
வேதமிலாக்கதிர்முதிர்ந்துவரவரக்கீழிறைஞ்சுமால். ௯௬

உருத்திட்பமுறுகாலைத்தலைநிறீஇயுற்றதற்பின்
றருக்கற்றுநனிவணங்கிப்பழுத்தகதிர்த்தடஞ்சாலி
பெருக்கத்துவேண்டுமாற்பெரும்பணிவுமிகச்சிறிய
சுருக்கத்துவேண்டுமுயர்வெனுமொழியின்சுவைதேற்றும். ௯௭

தூமதிவாக்கியகிரணந்துளித்தென்னக்கதிர்ச்சாலி
காமர்மணித்தரளங்கள்கான்றுசெறுத்திடராக்கிப்
பூமலரக்கால்யாத்தபுனன்முழுதும்புறங்கவிழ்த்து
மாமைநீர்புலர்த்தவருமள்ளருளமகிழ்விக்கும். ௯௮

வணங்குகுலைக்கதிர்ச்சாலிசிலையாகவளர்புதழி
யுணங்குகதிர்கணையாகவொளிர்முளரிக்கரம்பற்றி
யிணங்குபசுங்குரல்கவரவரும்புட்களிரிந்தோட
வணங்குபுரிந்தெதிர்கண்டோரதிசயிப்பச்செயும்பணைகள். ௯௯

குறையவித்தினைகொண்டுகுடியெலா
நிறையச்சாலிநிரப்புவயும்பணை,
யிறையளித்தவிருநாழிநெற்கொண்டே
யறமெலாநிறைவிக்குமுமலைபோல். ககo

கொடுப்பகொண்டுபெருக்கிக்கொடுத்தலா
லடுத்தவாணிகர்போலுமுழகன்பணை;
யுடுத்தசோலைகளும்பர்கடவுணீர்
மடுப்பதென்னவளர்ந்தெழுந்தோங்குமால். ககக

கலிநிலைத்துறை.

கொண்டலுக்குழாலிநிகர்ப்பக்குளிர்பாளை
விண்டுமுகைக்கும்பைங்கமுகெங்கும்விளையாட்டு
வண்டலர்கொங்கைக்கிண்டயிளநீர்முழவர்காண
தண்டமிசைக்கொண்டெய்தியளிக்கும்வளர்தெங்கு. ககஉ

செற்றெயில்வென்றூர்தேர்மிசைமேற்போக்தெனமென்பூந்
துற்றபொதும்பர்த்துறையினினத்தாற்செருவேற்றுப்
பற்றியவாவிநீங்குபுபைந்தேளடைநீடி
யுற்றெழுவாளைபொருதுயிர்விண்டோர்கதிகாட்டும். ககங

போதுகண்மேயநெடுங்கயமேவுபுனிற்றுக்கார்
மேதியையாயிடைவாளைவெகுண்டுவிசும்பேறி
பாதிவெரிந்புறமுட்குழியக்குதிபாய்ந்தாடி
மீதுயர்திண்கரையேறவுகைக்கும்வியப்பிற்றால். ககச

சுவையொளியூறொலிநாற்றமெனோங்கின்றொடர்பற்றிக்
கவர்படுநெஞ்சிற்றிரைதிரைதோறுங்கடைநீர்நாய்
துவளவெழும்பாமுறைமுறைகீழ்நீர்ச்சுழல்காட்சி
யெவருமிறும்பூதுறவுளவேரித்தடமெங்கும். ககரு

கரைத்துறுதண்பூங்காஞ்சிகள்சாகைக்கரமோச்சி
விரைததகரும்பைத்தைவருதோற்றம்விரிதார்வண்
டிரைத்தெழுதிண்டோட்கேள்வரொடூடுமிளையார்மே
னிரைத்தமர்செய்வான்வேள்சிலைபற்றுநிகழ்விற்றால். ககசு

மேதகுசெவ்வணிதாங்கினர்செல்லுமினன்னோருந்
தீதறவெள்ளணிபூண்டுசெல்சேடியராநோரும்
போதலுமீடலுமாய்ப்பொலிவீதிகளெங்கெங்குங்
காதல்செய்சேரிமடந்தையருள்ளங்கவல்விக்கும். ககஎ

தசும்புறழ்கொங்கையொடெம்பெருமான்மகிழ்தண்பாசூர்
விசும்பையுரிஞ்சுமதிற்றிருவல்லம்விரைச்செந்தே
னசும்புதடம்பொழிலேனையவைப்புழனந்தஞ்சூழ்
பசும்பணைமாமருதத்தெழில்யார்பகர்கிற்பாரே. ககஅ

நெய்தல்.

கொச்சகக்கலிப்பா.

அம்மருதவைப்பினையடுத்தகழிநெய்தன்
மம்மர்விடாலமுமாணுக்குதவுமாற்று
னம்மினமெனப்பொய்ம்மொழிகாடியுரைஞைதை
சும்மையிளைக்கரொகுழுந்தறவுகொள்ளும். ககக

கண்டன்மடலேறவலர்தூற்றுகமழ்புன்னை
யுண்டுநறைகாலுமளியொத்துடனிசைக்கும்
வண்டுளரரும்புவிரிநெய்தன்மணமிசையுங்
குண்டுகழிமேய்பறவைநோக்கிமகிழ்கூரும். ௧௨௦

கண்டுமொழியாரவயவத்தெழில்கவர்ந்து
தெண்டிரையளக்கரினொளித்ததுதெளிந்து
கொண்டதுறையோர்கடல்குளிப்பர்தனிச்சங்கம்
வண்டரளம்வாரிமடவாரெதிர்குவிப்பார். ௧௨௧

எம்முடையுறுப்பெழிலைவவ்வினிர்களென்னுக்
கொம்மைமுலைவம்பணிபரத்தியர்வெகுண்டு
விம்முவளைசேல்பவளம்வெண்டரளமற்று
மம்மபிறர்கொள்ளவிலையாற்றிமகிழ்கூர்வார். ௧௨௨

கண்ணெழில்கவர்ந்தகடன்மீன்களையுணக்கு
முண்ணமிழ்தமன்னமடவார்பறவையோப்பும்
பண்ணிசைமடுப்பவிழைபவ்வமுழருக்கன்
விண்ணெழுபகற்பொழுதின்மெல்லெனவொலிக்கும். ௧௨௩

தணந்தவர்களாருயிர்வருத்தவிறல்சாற்றி
மணந்தழுவுதும்பைமலர்சூடியடன்மார
னணங்கமர்செய்காலமெனவோர்ந்துமுரசாழி
யிணங்குறவிராப்பொழுதின்மிக்கொலியெழுப்பும். ௧௨௪

வீழ்ந்தவர்தணத்தலின்விழிப்புனலுகுத்துத்
தாழ்ந்தழுதிரங்குமடமாதர்தமைநோக்கி
யாழ்ந்தகழியாதுமுடனின்றழுவதென்னச்
சூழ்ந்துபுளரற்றுமலர்த்தேத்துளிதுளிக்கும். ௧௨௫

நலம்பயில்பொருட்குமலிவங்கமிசைநண்ணும்
புலம்பர்வருகின்றவழிநோக்கினர்புலம்பி
யிலம்படுமடந்தையர்களின்னுயிர்தளிர்ப்ப
வலம்புகுளிர்பூந்திவலைவீசுமலைவாரி. ௧௨௬

புன்புறாதத்தரும்வியந்துபுகழ்செய்ய
வென்னையொருபெண்ணெனவியற்றுநகரொற்றி
நன்பதிமுதற்பலவுமுத்தநளிநெய்த
றன்பெருமையாவரளவிட்டறிதரத்தோர். ௧௨௭

திணைமயக்கம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருத்தொண்டைநன்னாட்டுநானிலத்தைந்திணைவளமுந்தெரித்துக்காட்ட
மருத்தொண்டைவாய்ச்சியர்சூழ்குன்றைநகர்க்குலக்கவியேவல்லானல்லாற்
கருத்தொண்டரெம்போல்வாரெவ்வாறுதெரிந்துரைப்பார்கலந்தார்க்கின்ப
முருத்தொண்டரணியிலவையொன்றோடொன்றியைந்தனவுமாங்காங்குண்டால்.

வரைப்பிண்டிமலர்தூவிவனிப்பலர்செதிர்சொரிந்தமலருண்மூழ்கி
நிரைக்கும்பூங்கணைதூவிமதனெழுமான்விழிநெருப்புப்பணிற்றல்காட்டும்
வரைத்துள்ளுதுறிக்கொடிபோய்க்கடுக்கைமிசைமரகததோரணம்போற்று
னிரைக்கின்னொவரணமுமெதிர்கடப்பப்பொருநர்செங்கவிறுகாட்டும்.

சுற்றொழுங்குமலர்முல்லைத்தைந்துபெருங்குறுசெயிலுதன்மேழென்று
பற்றிதுழைந்துறங்கநடுவெளாவென்றுறையின்சக்கறிதாயப்படருந்தோற்ற
முற்றராக்கன்வெள்ளிமலையெடுத்தநாள்வெரீஇத்தழுவுமுண்மையாளோடுங்
கற்றைவார்சடைப்பெருமானின்றநிலைகாட்டுவதுமுண்டாலங்கண்.

தாழ்பயிலும்வரைக்கிளைத்தசெயலைமலர்கவர்மாரன்றன்மேற்சீறி [கும்
யாம்பலினங்கழனியிற்போய்வன்சேழச்சிலைக்கருப்பையழித்துண்டார்க்
பூம்புகைர்ப்பகட்டினங்கள்வெகுண்டெழுந்துமலைச்சாரற்புனிற்றுவானழ
தேம்பயில்செங்கினையினைத்துழிழித்துழக்கிமேய்ந்துவக்குஞ்செவ்வித்தோர்பால்.

வரைக்குறக்கன்னியர்புனத்துக்குருகோட்டுங்கவண்மணிக்கன்மருதத்தெண்ணீர்த்
திரைக்கயத்துக்கிடர்செய்யவருவலத்துச்சிறுமகார்சினமீக்கொண்டு
விரைத்தகுழற்பேதையர்கள்வண்டலாட்டயர்துறையின்மேவிப்பந்து
நிரைக்கழங்குமுழவரலறப்பறித்தெறிந்துநீர்ச்சுனையைத்தூர்ப்பாரங்கண்.

தாமுமொருப்பயுப்படார்பயப்புலவார்தம்மையுந்தம்போற்செய்வார்போற்
காமரளிநுகராமற்கழிப்பூமேலடுக்கலுறுங்கணிதேனூற்று
றாழிதனையறிந்துவெகுண்டெழுந்தென்னிணிவேங்கைக்குடுமிதன்னைச்
நாமநீள்கடல்பவளக்கரநீட்டிப்பற்றியிடுநலமுமோர்பால்.

அலைக்காகமலைச்சாரற்பலாச்சுளையைக்கவ்வியெழுந்தரக்கர்கோமான
சிலைத்தாசரதிமனையைக்கொண்டகன்றாலெனவங்கஞ்சேருமந்நா
ணிலைப்பானமதிலிலங்கைமிசைத்தாவுமனுமனைப்போனீள்வான்மந்தி
மலைப்பானின்றலைத்தோணிபாய்ந்துழக்கிமீண்டெய்தும்வாழ்வுமங்கண்.

இடைச்சியர்பானடைகற்பச்செல்வமெனவயன்மேவுமெகினமெல்லாம்
படைத்துவளம்பாடியிற்போயான்பாலைவாய்மடுத்துப்பையுணீங்கு
மடைத்தலைசூழ்வயன்மகளிர்மொழிபயிலப்போவதெனவுளத்துள்வாழும் [ல்.
பெடைக்குயில்போய்ப்பணைக்கமுகின்கனிதின்னடைக்கனியென்னப்பேணுமோர்பா

கொடும்பரவர்கழியுழக்கக்குதித்தெழுமீனாய்ச்சியர்பாற்குடத்துள்வீழ்ந்தக்
கடும்பயுத்தோடலமருமற்றவர்கடையுந்தயிரோதைக்கலமந்தோடி
யொடுங்குமுயல்கைதையினுள்ளடங்கியங்கட்கடலொலிகேட்டுள்ளமாழ்குங்
கொடுங்கருமத்தொடரந்தோயாங்குறினும்விடாதென்னக்காட்டுமோர்பால்.

இடுகுழிடைக்கடைசியர்கள்களைந்தெறிந்தநறுங்கமலமிரைக்குமுந்நீர்ப்
படுதிரைமேல்வயங்குதலுங்கடன்முளரிபூத்ததெவன்பாரீரென்பா
ருடைதிரைநீர்க்கடல்கிளைத்ததுகிர்க்கொடிபோய்ப்பழனமிசையொளிரக்கண்டோர்
கழிவயலுந்துகிரீன்றதென்னென்பாரிப்பரிசுகவினுமோர்பால்.

வரைப்புறத்துப்பசுங்கிளியுங்கான்குயிலுமுடனன்பான்மடுத்துப்புட்க
ளிரைத்தெழுபூம்பணைமருதச்சேக்கைமிசையெதிரெதிரிசைகள்பாடு
நிரைக்குமிவ்வரைப்பதுழ்வயற்கடுங்கரும்பொடித்துநெரித்துமாந்தித்
திரைத்தடனீர்க்கான்யாற்றுத்திளைத்தாடியுடனுறங்குஞ்செவ்வித்தோர்பால்.

புறவகத்துக்குமிழம்போதுங்கழிக்கானற்கைதைதரும்பொலங்கேழ்ப்பூவுந்
தறுகண்பொறுத்தவனாதோன்றித்தணமலர்மேனிருபுடையுந்தாங்கிநின்றே
யிறைவனுக்காழலர்மோத்தாண்மூக்கரித்துசரிகையுடனேந்தியுக்காரண்
முறைநிறுத்தசெருக்கனையார்நின்றநிலைகாட்டிவளஞ்செழிக்குமோர்பால்.

விண்முட்டுங்குடுமிவரைத்திகிரிபடுமுவணைமுத்தும்வேலைச்சூழன்
மண்முட்டகறும்புன்னையுகுழ்ருங்புக்தமயங்கியவற்றுட்சேர்ந்த
தண்முட்டைவிதுவென்னிப்பகுத்தறியவல்லாதுதளர்வுகொண்டு
கண்முட்டவளம்புடைத்தவயலுன்னுந்துயர்கூருங்காட்சித்தோர்பால்.

குறுஞ்சுனையிற்களிவண்டுசுழன்றாடுங்கான்குயில்கள்குரைநீர்ப்புன்னை
தொறும்பொதளுங்கருங்கொடிதன்குடம்பையிற்போய்க்கருவுயிர்த்துச்சலவிமீண்டு
நறும்பிரசமலர்க்காஞ்சிச்சினையேறியொளியிருந்துகாடிக்கால
முறுந்துணையுழினிதுறையுமுலவாதவளங்காட்டியோங்குமோர்பால்.

கறிக்கொடியுந்துளக்கொடியுநெடுவயலைப்பசுங்கொடியுங்கமழ்தேன்மௌவல்
வெறிக்கொடியுநாற்றிசையுந்தாய்ப்படரநிவளர்ந்தவிரைக்குராமேற்
றிறிக்கொடியபெருங்காற்றுற்பலுகாலுமசைபாலைக்கிளர்ச்சிவாளனை
மறிக்கொடியுங்கூத்தியர்செய்கையிறுவிறிகழைக்கூத்தின்வயங்குமோர்பால்.

இனையநானிலமுடுத்தவளாகமெலாம்பெருங்குடிகளியல்பினோங்கித்
தினையளவுமுறைபிறழாத்தொண்டைநாட்டணிமுழுதுந்தெரித்துக்கூறக்
கனைதிரைநீர்க்கடலாடைநிலவரைப்பின்யாருளரோகற்பநாட்டுந்
தனைநிகர்பாதலதலத்துமன்னதேயெனிற்பிறிதுசாற்றுமாறென்.

ஏங்நாட்டுப்பெருவளமுமெய்வெவர்கோட்பாடுகளுமியம்பவல்ல
பொன்னாட்டுப்பொன்செருக்கும்பன்னக்குப்பணிச்செருக்கும்போக்குமித்த
நன்னாட்டைப்புலவரெலாந்தொண்டைநாடெனவுரைப்பர்ஞாலமங்கை
தன்னாட்போதனையமுகக்கனிவாயாங்காரணத்தின்சார்பாற்போலும்.

சலதியுடைச்சேயிழைக்குத்தமிழ்நாடேமதிமுகமாத்தமிழ்நாட்டுள்ளு
மலர்புகழ்த்தண்டகநாடேகனிவாயாவதனுள்ளுஞ்சாதிபேதங்
குலவுமாருயிர்களெல்லாந்தத்தமதுமரபொழுக்கங்குன்றுகைசேரா
மலகமெனத்தேற்றுதலினெலாங்காஞ்சிநகர்வண்மைசொல்வாம்.

திருநாட்டுப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - [illegible]

# திருநகரப்படலம்.

---

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கச்சிமாநகரோர்தட்டுங்கடவுளருலகோர்தட்டும்
வைச்சுமுன்னயனார்தூக்கமற்றதுமீதுசெல்ல
நிச்சயமுறுகித்தாழ்ந்துநிலமிசைவிழுமிவ்வூரை
யிச்சகத்தூர்களோடுமெண்ணுதன்மடமைப்பாற்றே.

கவினெலாந்திரட்டிக்காஞ்சிக்கடிநகராக்கிக்கஞ்சத்
தவிசினோன்றன்பாலுட்பத்தொழில்செயச்சார்ந்தகாலைப்
புவியிடைக்கழிந்தசேடம்பொற்பவேறெடுத்துவிண்ணு
டவிர்தரச்செய்தான்போலுமன்றிவேறுரைப்பதென்னோ. உ

ஆதிநாண்முக்கணெம்மானயன்றனைப்படைத்துவேத
மோதுவித்தருளினுக்கியுலகெலாம்படையென்றேவும்
போதிதுபார்த்திவ்வாறுபடையெனப்புகன்றமைத்தா
னீதெனவுன்னுங்காஞ்சியென்றுரையளவைத்தாமே.

இந்நகர்நோக்குந்தோறுமிமையவர்தமதுநாடு
நன்னரென்றிருந்ததம்மைத்தாங்களேநாணிநைவர்
முன்னொருசமயந்தன்னைப்பொருளெனப்பற்றிநின்றோர்
பின்னர்வான்சைவமெய்தப்பெறினவர்பேசுமாபோல். ௪

நீடுமிந்நகரமன்னிநெடுந்தவமுயல்வோர்வான
நாடர்தம்பதமுங்கஞ்சனாரணன்வலாரிவைப்பும்
பாடிரிகான்றசோறுக்காண்புதிப்பதியின்வன்மை
கோடியிலொருகூறொவ்வாவவையெனக்குறித்தேயன்றே. ௫

புறநகர் - சோலை.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சுரும்புகாலுழக்கமுகையுடைந்தலர்ந்துதுளித்ததீஞ்சுவைமதுப்பிலிற்று
மரும்பெறற்சோலைமீமிசைக்கருவிமுகிற்குழாமுட்டுவபாட்டளிக்கு
விரும்புதேனளியாக்கற்பகநாட்டைவெல்லுவான்வருவதோர்ந்தஞ்சித்
தரும்புகழ்வலாரியூர்தியைச்செலுத்தித்தடுத்திடைமடக்குதன்மானும்.

நறவமூற்றெடுப்பச்சிறகர்வண்டிமிருநளிபொழிலிடும்பைகூர்ந்தழகு
குறைபடப்பொதிந்தகுயினங்களைவல்லைகுத்தலெழூஉத்துதைத்துதைத்தகற்றி
நிறைபுனற்றடத்துப்பிறழ்தருங்கிழமைநெட்டிளவாளைமீன்றனக்குத்
துறைதொறுங்கைம்மாறெனக்கனிசெழுந்தேன்சொரிவனநெடுமரப்பொதும்பர். ௭

வண்டலாட்டயரும்வாண்மருணெடுங்கண்மங்கையர்நெறிசுரிகூந்தற்
கொண்டலைக்காணுந்தொறுந்தொறுமவர்தங்கோமளச்சாயலுக்குடைந்து
தொண்டுபூண்டெதிரின்முடுவதேய்ப்பதோகைமாமயிலடங்குயிற்றும்,
தண்டளிர்துவன்றிப்புதுநறுந்துளிக்குந்ததைமலர்ச்சாகையம்பொதும்பர்.

வாம்பெருந்திரையதடம்புடையுடுத்தவளம்பொழிற்சாகைகடோறும்
தீம்புனல்குடையுமாதரார்முன்னாட்செறித்தபட்டாடைபொன்னணிகள்
பூம்புனலகத்திற்றோன்றலுமிளையோர்புனலரமகளிரென்றஞ்சிக்
கூம்பியகரத்தரந்நலார்நகைப்பக்குலைமிசைநோக்கிவெள்குவரால்.

கொங்கவிழ்பொதும்பர்க்கொழுமுகையுடைந்துகுளிர்மதுச்சொரிதலினைந்த
பூங்கயச்சேக்கைமீமிசைமயங்கிளம்பைப்பயமேனிவந்தெழுவ
பொங்குவெம்பாவக்கருமுருட்டிமண்ணுறப்புணரியுட்சிலையுடனமிழ்ந்து
மெங்கள்வாகீசரஞ்செழுத்தருளாலெழுந்துமேல்வயங்குதன்மானும். ௧௦

யானைக்கூடம்.

கலிவிருத்தம்.

முறைமுறைபனைக்கைநீர்முகந்துவாய்மடுஉ
நிறைதடங்குறைதடமாக்குநீண்டவென்
பிறைமருப்பொருத்தன்மாமதப்பெருக்கினாற்
குறைதடநிறைதடமாக்குங்கொள்கைத்தே. ௧௧

தாமுறையிடந்தரியலர்கட்கீந்தவர்
தாமுறையிடங்களிற்றங்கிளைக்குலங்,
தாமுறப்பரிவருத்தனைசெய்வேழங்க
டாமுறைமுறைதிரிதண்டமெண்ணில.

மழைப்புனறங்கண்மேலூற்றுமாமுகி
லுழைச்செலவெகுண்டெடிதிரிறைப்பதொப்பநின்
புழைக்கையினிறையநீர்முகந்துபோர்மதத்
தழைச்செவிக்கரிகள்விண்டலத்துவீசுவ. ௧௩

கறையடிச்சுவடெனுங்கனகவட்டில்க
ணிறையவாக்கியமதநீரைச்செல்வர்போற்
சிறையளிக்குலமெழலாற்றெவிட்டவுண்டுவாழ்ந்
தறைபெருவளத்தனவாம்பல்வீதியே. ௧௪

கொடையினிற்கீழ்ப்படுங்கொண்டல்யாவையுந்
தடைபடச்சிறையிலிட்டாங்குச்சார்கடு
நடையிருமுறச்செவிநான்றவாய்க்களி
றடையவும்பிணித்தனவளவில்கூடமே. ௧௫

துதிரைப்பந்தி.

கரியுமிழ்விலாழியுங்காய்சினக்கடும்
பரியுமிழ்விலாழியும்பாய்ந்துசேறுசெய்
தெருவெலாமநலார்சீறடிச்சுவ
டுருகெழுதாமரைதோற்றமெனக்குமே. ௧௬

சுலவுகொய்யுளையடிச்சுவடுதோறுமேற்
கலனையினுக்கசெம்மணிகதிர்ப்பன
பலசுடர்த்தகழிகள்பரப்பிவைத்தெனக்
குலவுநல்வளத்தனகுந்தவீதியே. ௧௭

மல்லரைமயிலகளைவானரங்களைப்
புல்லியமுயலகளைப்பொருசரங்களை
வல்லவாபுறகடைநடைகண்டவான்கதிப்
பல்லியற்புரவியின்பந்தியாயிரம். ௧௮

மதக்கரிதனைமுயலவயங்கொள்காதையைப்
புதுககவீங்கிருமொளிப்பொலிவைப்பற்றியீர்த்
ததிர்ப்பதென்றுளுந்தொளக்கரியவாங்குரா
கனத்தத்தொகைபற்றுபொற்றேர்கணக்கில. ௧௯

எரிமணிச்சோதியுண்மூழ்கியீர்ததுச்செல்
பரிகளைக்காண்கிலர்பார்த்துச்சூரனூர்
திருவுடையிந்திரஞாலத்தேர்கொலென்
றுருகெழச்செல்லுதேருலப்பில்வீதியே. ௨௦

வீரநிருக்கை.

நால்வகைநிலையினுற்பயிலுகாமவில்
வேல்வளைபலகைவாள்கற்கும்விஞ்சையர்
கோலவான்விஞ்சையர்குமரங்களைக்குப்
சால்பினைவியத்தகுதலைமைப்பாலரே. ௨௧

கிம்புரிபுரசைகள்கிடுகுகூவிர
மம்பொனிற்கலனைகுப்பாயமாதிய
வெம்படையேனவும்வேறுவேறுசெய்
பம்பியவினைஞர்வாழிடம்பல்லாயிரம்.

நடைநகமுதலியவுலவுநாழிகீர்ப்
புடைநகர்வளாழிதுபுகன்றுந்திங்களே
ருடைநகமமைழிகரோதியார்பயி
லிடைநகர்வளஞினியியம்பலுற்றதே. உ௩

### இடைநகர்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

குடமுலைக்கெதிரென்றூதுங்குரும்புடையவெகுண்டுமின்னார்
பொடியிடியுலக்கைமீப்போய்ப்புடைத்தனமீளமுன்ன
முடிமிசையதிரத்தாக்கிச்சிந்துமுப்புடைக்காய்த்தெங்கீங்
கிடரிடர்க்கெதிர்செய்வோரின்வியத்தகவெங்குமோங்கும். உ௪

கோல்வளைகறங்கக்கொங்கையசைதரக்குலையக்கூந்தன்
மேலணிகலகலென்னவியர்வெழவுயிர்ப்புநீள
வால்வரிப்புனைபந்தாடுமாதரார்செயல்காண்டோறுங்
கால்வரிகழலினுர்க்குக்காமமீக்கூருமாதோ. உ௫

தமதுருநிறத்தைவவ்வுந்தருக்கறிந்தொறுப்பார்போலத்
தமனியந்தகர்த்தசுண்ணமொருவர்மேலொருவர்வீசத்
தமனியச்சுண்ணமெங்கும்பரந்தனதவழ்தலாலே
தமனியவுலகந்தன்னையுசிப்பனதடந்தேர்வீதி. உ௬

எரிமணிசோதிகால்விருள்வரவறியாமாடத்
தரிவையர்கூந்தலூட்டுமகிற்புகைநாகத்தெய்திப்
பெரிதிருள்விளைப்பநாகரும்பெற்றியோர்கட்டுமாறு
மரீஇயினவுலகமென்னேயெனமனமருள்வரம்மா. உ௭

### அகழி.

மாற்றவள்பூசையாற்றிவரம்பெறுமுறைமைகேளா
வேற்றமார்கங்கையாளுங்கம்பர்பால்வரத்திற்றெய்திச்
சாற்றருங்கச்சிமூதூர்வலங்கொளுந்தகைமைத்தாய
வாற்றல்சாலகழியாழமகலமாரளக்கவல்லார். உ௮

நெடுபடுபொதும்பர்சூழநிரைதிரைக்கரத்தாற்செம்பொற்
றடமதில்பொதியப்புல்லுந்தண்கிடங்கிறைவரேவக்
கடல்களேவளையநோக்கிக்கம்பரையிறுகப்புல்லுஞ்
சுடர்மணிக்கங்கைமானுந்துளித்தநீர்தழும்புமானும். உ௯

திரையெறிதரளம்பாங்கர்த்திரண்டுவாலொளிகள்வீசிக்
குரைபுனல்குளிக்கும்வேழக்குழாத்தைவெண்கயமாச்செய்யக்
கரைமிசைக்காண்போரென்னேயிம்மையேகடவுட்டன்மை
புரைதபத்தருமித்தீர்த்தமெனவிறும்பூதுகொள்வார். ௩0

கடம்படுகளிநல்யானைகுண்டகழ்கலக்கிக்கொட்பத்
தடங்கரையேறத்தார்த்துத்தாட்டொடர்பிணித்துப்பாக
ரிடம்படவிருபாலீர்ப்பவிருங்கடலமுதமுண்ணத்
தொடங்குநாட்சிலம்புநட்டுச்சுராசுரர்கடைதன்மானும். ௩௧

நவமணிகொழித்துப்பொங்குநளிதிரையகழிகாப்புட்
கவளமாக்கடத்தயானைக்கணஞ்சுலாயுழக்குங்காட்சி
புவர்படாப்பௌவழீதென்றுவந்துவந்தெழிலிதெண்ணீர்
சுவறவாய்மடுப்பக்கொட்குந்தோற்றமேயனையதம்மா. ௩௨

இத்தகையகழியென்னுமிதுவுமோர்கடலேயாக
வித்திறவிரட்டியென்றேமெனவுறைவர்மேலோர்
தத்தலைக்கடைக்கால்வட்டச்சிலதியுமாதுமன்றச்
சுத்தநீர்க்கடலென்றெண்ணியொருமையிற்றெருகுத்தார்போலும். ௧௩

புடைபயில்பொதும்பர்த்தேனும்புனன்மலர்த்தேனும்பாய்ந்து
விடையவர்க்குமையாளாட்டவருமதுவேலையொக்கும்,
குடநிகர்செருத்தன்மேதிகொட்புறச்சொரிந்தபாலா
லுடைதிரையகழிதீம்பாலளக்கருமுற்றுமொக்கும். ௧௪

பழமுகற்பொருள்கள்விற்கும்பாவையர்காணுமிழ்ந்திப்
பொழுதினக்கலன்கழீஇயவண்டலாற்புனற்கிடங்கு,
வழிபடுமுமையாளாங்கைக்காட்டுமொலியங்களொன்றும்
கழிவுறுசூழத்தேங்கிக்கிடந்ததேசுகடுக்குமன்றே. ௧௫

பாசடைக்கவயம்போர்த்துப்பகைஞரோடிகலித்தாலும்
பூசலைவிளைப்பவன்னோர்கணைபொருபுழைகடோறும்
தேசுறவெழுந்தசேரியாமெனச்செய்யகஞ்ச
மூசுவண்டியினர்ப்பமொய்த்துளதகழித்தெண்ணீர். ௧௬

அணிமலரழகேநோக்கியகழியாளிழிகின்றோரும்
இணியுமுட்கொடுமைநோக்கிச்சேயிடைவிலகுவோரும்,
கணிகையர்கோலநோக்கிக்காதலித்தகப்பட்டோரும்
பிணியுமுட்கருத்துநோக்கிவெரீஇப்பெயர்க்கல்கின்றோரும். ௧௭

மதில்.

(உ௬) கலிநிலைத்துறை.

கம்பையைத்தடுத்தபின்புசம்பணரமைத்தலும்
பம்பியார்த்தொருங்குபோவமேழுபுற்றுமாறுணர்ந்
தம்பையண்டபித்திகாறுமாக்குமாத்தடைப்புர
வம்புலர்க்கிடங்குசூழ்ந்தமல்லமேச்சியோங்குமே. ௧௮

திருக்கிளர்ச்சியிற்செருகுதேவநாடுபாதலத்
தருகுநோக்கிவெஞ்சினந்தலைச்செனாள்காஞ்சியப்புவவி
முருககவெண்ணிமுன்புபோய்வளைப்பவேவிமூண்டென
மருக்கிடங்குமிஞ்சியும்வியத்தகும்வளத்தவே. ௧௯

கிடங்கினெல்லைகாண்பதன்றுகீழுமேலுமாகநீள்
விடங்கர்தாளணிந்தவின்டுநோக்கமேவியன்றிநிற்
றடங்கொளெல்லைகாண்பதுந்தலைவர்தஞ்சடைத்தலை
யிடங்கொள்வெண்டலையலாபலேவர்காணவல்லரே. ௨௦

கச்சிவாணர்சென்னிதாள்கள்காணமுன்பறந்தகழ்ந்
தச்சழிந்தமால்விரிஞ்சரன்றுசென்றவெல்லைக
ணிச்சயிப்பவல்லவளவுமேகவைத்தநீள்குறி
கொச்சியுங்கிடங்குமென்னநோக்குவார்க்கிலங்குமே. ௨௧

இடித்தகழ்ந்துதம்மிருக்கையெற்றிநீர்க்கிடங்கினில்
வெடித்தெழுந்துதாவுவாளைமீனைமீண்டுருவகை
யடுத்துவிக்கவுண்டுதேக்கியம்பரத்துமீனையுந்
தடுத்துவென்றிகொள்ளவுள்ளசார்மதிற்செகுழிக்குலம். ௨௨

உடல்படைத்தியக்கவோர்நிமித்தனுண்டெனக்கொளத்
திடம்வலித்தசான்றதாயுவனர்தாட்செயப்படுந்
தொடர்புடைப்பொறிக்குலஞ்சுழன்றெழும்விழும்பகை
மிடல்கெடத்தெழிக்குமோடுமீளுமின்னநீரவே. ௪௩

இம்மதிற்பொறிக்குலமெதிர்த்துளோர்தமைச்செகுத்
திம்மெனுமுன்வென்றிகொள்ளுமீதுணர்ந்துதெவ்விர்கா
ளம்மவீண்டுறேன்மினென்றுகையெடுத்தசைப்பபோ
லம்மதிற்றலைத்துகிற்கொடிநுடங்குமாலரோ. ௪௪

கலிவிருத்தம்.

வளமுகன்றிருநகர்க்கிழத்திமாமைசா
லிளமுலைதிளைப்பக்காரொழினிசேர்த்துபு
தளர்வறநாட்டியதம்பமேயெனக்
கிளர்மதிலிடந்தொறுஞ்செறியுங்கேதனம். ௪௫

நேமிமால்வரைமிசைக்கிளைத்துநீண்டவே
யாமெனக்கொடிமிடையமபொன்மாமதின
மீமிசைக்கோபுரமேலுஞ்சேறலால
யாமினிப்புகல்வதற்குவமையில்லையே. ௪௬

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மகதநாடென்னக்காஞ்சிவைப்பினுங்கடைஞரெய்தி
யிகலறவளர்க்குமெண்ணெண்கறத்தினுக்கிடர்செய்யாமைத்
தகையுணங்குமையாள்வைத்ததடைநிகர்மதிற்சீர்முற்றும்
புகரறவியம்பப்புக்காற்புலவர்க்குமுலப்புறாதே. ௪௭

மிடைபுறத்தூர்களெல்லாம்விண்ணவர்நகராவங்கட்
புடைநகரயனூராகப்பூமகள்கொழுநன்றன்னூ
ரிடைநகராகமற்றையீசனூருலகமேயா
நடைபிறழாதசீர்த்திபடைத்தவண்ணகரஞ்சொல்வாம். ௪௮

அகநகர் - பரத்தையர்வீதி.

அளிமதனூலினுற்றுலாடவர்தம்மோடாடிக்
களிமனக்குள்ளாற்றுங்கள்விளைத்திடுங்கலவியெல்லாந்
தெளிதரமாடந்தோறுஞ்சித்திரந்தன்னிற்காட்டி
யிளையரைமயக்கிகாமமேற்றுவோர்சேரிமல்கும். ௪௯

வரியளிமுரலாவாடாமாலையவிமையாநோக்க,
தரைமிசைத்தோயாத்தாளசித்திரந்தயங்குகாட்சி
வரைவிலாமகளிரின்னோர்மாணலம்வேட்டுவானிற்
சுரர்களுமெய்திச்செவ்விபார்த்துறைதோற்றமொக்கும். ௫௦

பூத்தபினிராறுநாளுங்கிழத்தியர்ப்புணர்ந்துதம்மை
நீத்தனரெனுஞ்சீற்றத்தானின்றவீரொன்பானுண
மேத்துமாடவரைத்தங்களிளமுலைத்துருக்கமேற்றிப்
பாத்திருநிதியமெல்லாம்பறித்தனர்கொள்ளைகொள்வார். ௫௧

கோலத்தினிசையின்யாணர்க்கூத்தினினாவிநயத்திற்
சீலத்திற்கலவிச்செய்கைத்திறத்தினிற்பிறவாற்றானு
ஞாலத்துமைந்தர்தம்மைமருட்டிநற்பொருள்கள்வவ்விக்
காலுற்றசாற்றுவேழக்கோதுபோற்கழியநீப்பார்.

### மற்றையவீதி.

அறத்தினீணகர்புவனசக்கரமெனவூன்ற
இறத்தபொன்மதிலேழுடைச்சின்மயக்கோயிற்
புறத்துவான்மிசைப்புலவர்கண்ணூறுபட்டிடாமை
மறைத்தெனக்குயினுரிஞ்சுபூம்பந்தர்சான்மறுகு. சுங

மகரப்பொற்குழைப்பிரான்றளிசூழ்மதில்குறடு
நகரச்சீரெயில்சுற்றுமாளிகைநிரையாரும்
திகழச்சூழ்தெருவாரிடைவெளியுமாய்ச்சிவன்றேர்ச்
சகடத்தேருடைச்சகடமற்றொன்றெனத்தயங்கும். சுச

சரிக்குங்குஞ்சரமதப்பெருங்கலுழியுந்தளவைச்
சிரிக்குமூரலார்களைந்ததார்நறவமுஞ்சேறாய்
விரிக்கும்வீதியிலடிவழுக்காவகைவெயிலைப்
புரிக்குஞ்செம்மணிபதித்துமேனடப்பராற்புரியோர். சுரு

ஞெள்ளற்பாங்கரினறியநீர்வண்டலாட்டயரு
மள்ளற்சேறுகள்புலர்த்துவானிடையிடையகழ்ந்து
பள்ளத்தாற்சிறுகால்பலவகுத்தெனப்பிறங்கும்,
வள்ளற்காவலர்செலுத்துதேர்ச்சகடுபோம்வழியே. சுசு

செய்யதிண்புயத்தெழிலினைக்கவர்ந்தமைதெரிந்து
வெய்யமாந்தர்கள்வெதும்புறப்பன்முறைதாக்க,
வையவோவெனவலறுவபோலணிமுழவ
மையவேலையுஞ்சமழ்ப்புறவயின்றொறுங்கறங்கும். சுஎ

விலாழிநீருமொண்சந்தனவிரைச்செழுஞ்சேறும்,
குலாயவீதிகால்வழுக்குமென்றஞ்சுபுகோண
னிலாமுடித்தவர்திருவிழாத்தொழவந்துநெருங்கும்
வலாரியாதியோரடிபடியுருவகைநடப்பார். சுஅ

புரசைத்திண்களிறுலாத்தரும்பொலஞ்சுடர்மறுகிற்
பரசப்போதருமன்னவர்பணிமுடிநெருக்கி
னரசப்பன்மணிதெறித்துவீழ்ந்திமைப்பனவிவியா
முரசப்பேரொலியதிர்ப்பினிலுக்கமுதுப்போல். சுகூ

அங்கண்வீதியினணிநலங்காணுமாதரத்தி
னெங்கணுந்தனுந்திருவிழாவென்பதோர்பெயரான்
மங்கையாளொடுமகாரொடும்வானவர்பழிச்சத்
திங்கடோறெழுந்தருளுமேவுதன்வளஞ்சிறிதோ. எ0

### மாளிகை.

பாலியேமுதல்பலநதித்திவலைபாய்ந்தழகின்
பாலவாயமாளிகையடித்தலத்தினைப்பாராய்
பாலவெண்சுதைமாடமேற்சிகரமும்பனிவிண்
பாலியாற்றுநீர்த்திவலைகள்போர்ப்பவான்படரும். எக

பன்னிறப்பரிகருங்கரிதொழிலமைபஃறே
ரின்னகீழ்நிலைவாயிலினியங்குதனோக்கி,
மன்னுமேனிலைவாயில்வெண்கரிபசுமான்றே
ரன்னவேனவுந்தன்னிடத்தியங்கவாளனவும். எ௨

உங்கண்மாதரார்முகத்தெழினோக்கியோர்வடிவங்
கங்கணுளகுளான்படைத்ததிலவயவங்காண்பா
னங்கண்முன்னுறவகுப்புழியஞ்சனக்குலையப்
பங்கமுற்றதென்றெழுதித்ததைமதியெனப்பகர்வார். அக

இவ்வரைப்பினிவிரவியுமதியுமம்வழியே
செவ்வனோகுருதொதுங்குவவிவர்முகச்சீர்க்கும்
பவ்வநேரகலல்குற்கும்வடிவெடுப்பொத்தே
ரொவ்வுருமைகண்டுட்கொளுமுட்கினலன்றே. அச

தங்கள்வாண்முகமதியெனச்சார்தரும்பணிக்குத்
துங்கமாடமேன்மின்னனார்வேற்றுமைதோற்றத்
திங்கண்மாட்டுறிகுறியொன்றுசெய்துவைத்தனரா
லங்கண்மாநிலங்களங்கமென்றிடப்படுமதுவே. அரு

மறைந்திடாமறுப்பயின்மதிமுகத்தெழில்பெறுது,
குறைந்துபார்க்குமங்கரிவையார்கோணுதல்கடுப்ப,
நிறைந்துபார்க்குமீண்டவர்முகநிகர்ப்பமற்றிவ்வா
றறைந்ததிங்கடோறலமருமக்கரைப்பசுப்போல். அசு

கதிர்செய்மாடமேற்புலவிதீர்கலவியின்முடிவின்
வெதிர்செய்தோளியர்கொண்கர்தம்மருமமேல்வதனம்
பதியவைத்தனர்துயிலுவரற்றம்பார்த்திருந்து
புதுமுகத்தெழிலுடுபதிவெளவுருப்பொருட்டே. அள

தேங்குமூடலின்மாதரார்பறித்தெறிசெங்கே
ழோங்குபன்மணியவரடிவருந்திநைந்துளோய
வாங்குநாடொறும்பைதுறுத்தவிர்வனகொடிதாத்
தாங்கள்செய்வினைதங்களுக்கேபகையாமே. அஅ

விருந்துநாடொறுமிடையறுதெதிருமேதகவா
லருந்திறற்சிறுபுதல்வர்சூழ்ந்தணுகிடுந்திறத்தான்
முருந்துமூரலார்க்காயிடைகடுமாநார்பான்மூண்ட
மருந்திலூடலுஞ்சிறுவரையன்றிமேவாதால். அசு

மேனிலத்துவந்துலாயிடுங்கடவுள்மெலலியலார்
தாழ்நிலத்துறுங்கூவல்கணோக்கிநந்தமைப்போற்
கீழ்நிலத்தவர்தாமுமிங்கெய்தினர்கெழீஇப்போ
மூழ்நிலைத்தபல்பிலங்கொலாமுனையெனவியப்பார். கூ0

கலிவிருத்தம்.

காலமன்றிக்கனிவுறமாதனைக்
கோலவான்புகையேற்றுதல்போன்மினார்
சாலவெம்முலைச்சாந்தம்புலர்த்திடு
நீலதூமமிமிர்ந்தெழுமெங்கணும். கூக

கொன்னும்வார்குழற்கூட்டுங்குரூஉப்புகை
யந்நலாரைப்பொதிவதவர்தமைத்
தன்னினீங்கியமின்னெனத்தண்முகி
லுன்னிவந்துவளைந்திடலொக்குமே. கூஉ

திருமதில்.

கலிவிருத்தம்.

விண்ணழிவுறுநீமிர்விறடக்குவா
னண்ணலார்னெயிஞிமிலூர்தியாண்டுநீறு
யெண்ணிலவுருவுகொண்டிருத்தநீரதே,
பண்ணமைமதின்மிசையிடபப்பந்தியே. ககக

திருக்கோபுரம்.

ஒன்பதுதோள்களுமுலாவிலைவகுவா
னொன்பதுபாடமுங்கூறிச்செய்தொ
வொன்பதுமணிகளினியன்றவொண்மைசா
லொன்பதுநிலைதழீஇயோங்குங்கோபுரம்.

கார்முகிலுடுக்கையாங்கதிர்வாளவள்
மார்பணிமணியதாவட்டயாமதி
சீர்நுதற்பூதியாச்செலவக்கோபுரம்
பார்புகழ்புருடனிலோங்கும்பான்மைத்தே. ககஙூ

நச்சியேகம்பரைத்தொழுதுநாடொறுங்
கச்சியில்வாழ்பவரிறுதிக்காலையி
லச்சிவலோகத்தையணுகவைத்ததோர்
பொச்சமிலேணியும்போலுங்கோபுரம். ககச

பரிதியினிழல்செயக்கதிர்க்கும்பன்மணித்
திருவியல்கோபுரச்செல்வவாய்தலின்
முரசுகாலந்தொறுமுழங்குஞ்செவ்வியென்
றருகுறுவமரரையழைத்தன்மானவே. ககரு

விடைகொடி.

மடுத்தவைம்பாசமூவரணமைந்தனும்
றடுத்தருள்கோயிலிற்றம்பிரானெதி
ரெடுத்தபூங்கொடிமிசையிடபம்வான்பிசை
யடுத்தோரிடபத்தோடளவளாவுமே. ககசு

விமானம்.

தங்குலத்திறைவிசெய்பூசைச்சால்பினை,
யங்கணன்மகிழ்வொடுங்காணுமாசையி
னெங்குளவரைகளுமீண்டிறுமெனப்
பொங்கெழிற்சிகரங்கள்பொலிந்துதோன்றுமால். ககஎ

மண்டபம்.

கன்மநோய்குடைபவர்கடப்பச்செய்திடும்
பன்மலர்துவன்றியதீர்த்தப்பாங்கரிற்
பொன்மலர்மண்டபம்பொலிந்துதோன்றுவ
தென்மணிப்பேழையைத்திறந்தமூடிபோல். ககஅ

வேள்விச்சாலை.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சேந்தபொற்குண்டத்தோங்குஞ்சிகைத்தழன்மிசையேகம்ப
வேந்தையாவாகித்தேத்தும்புகைபொதிவேள்விச்சாலை
யேய்ந்தசீர்த்தகரவித்தைமுறைப்படியிதயகஞ்சப்
பூந்தழற்சிகைமேலீசற்போற்றுமாயவனையொக்கும். ககசு

மாமூலத்தோருவர்.

கோழரைக்காம்பாச்சாகைவட்டமேற்குடையாப்பொற்பின்
வாழியவொருமாமீதுவளநிழல்கவிப்பவாங்க
ஞாழ்முறையுயிர்கட்கெல்லாமைந்தொழிலோம்பியெம்மா
ஞம்புனலுலகமேத்தவீசுவீற்றிருக்குமன்றே. ௪௨0

பற்பலதேயமெல்லாம்பாங்குடைத்தொண்டைநாடு
பற்பலசங்காப்பட்படர்வலம்புரியாமங்கட்
பற்பலநகரமெல்லாம்வட்டமாப்படைத்தகாஞ்சி
பற்பலவலம்புரிக்குட்சலஞ்சலப்பணிலமாமால். கஉக

அத்திருக்காஞ்சிவைப்பினலகிலாத்தலங்கடம்முட்
பத்திசேர்மாடக்கம்பம்பாஞ்சசன்னியமாமங்க
வுத்தமச்சுரிமுகத்துள்விலைவரம்புணராச்சாதி
முத்தமேயொருமாமூலத்திருந்தருணமுக்கண்மூர்த்தி. கஉஉ

பன்மணிவெயிலகளகான்றுபடரிருள்சீப்பவட்டப்
பொன்மதில்சூழ்ந்துநாப்பட்சதாசிவப்புத்தேள்வைகுந்
தன்மையாற்கச்சிமூதூர்தரைமிசையுயிர்கள்செய்த
கன்மமோர்ந்தளிப்பான்வந்தகதிர்செய்மண்டிலமேயாமால். கஉ௩

விலக்கிலாவறநூல்சொன்னமுனிவரும்விதிவிலக்கா
மிலக்கியமிதன்பாற்கண்டேயிலக்கணம்விதித்தார்போலு
மலக்கணீத்தறமெண்ணான்குமம்பையேவளர்க்குநீராற்
கலக்கமிலறங்கட்கெல்லாமாகரங்காஞ்சியன்றே. கஉ௪

உவரிசூழுலகவைப்பினுரையமைகேள்விசான்ற
கவிகளென்றுரைப்போர்தம்முட்காஞ்சியைப்புகழாரில்லை
பவரெலாம்புகழ்ந்துமின்னுமுலப்புறுவதன்சீர்மூற்றுஞ்
சிவநிறைகல்விசாலாச்சிறியனோகிளக்கவல்லேன். கஉ௫

இத்திருக்காஞ்சிவைப்பிற்பலதளியிடத்துமோவி
யத்தகுகம்பவாணரவரவர்க்கருளிச்செய்த
வுத்தமக்காதையெல்லாஞ்சூதனன்றுரைத்தவாறே
முத்தமிழறிஞர்தேறமொழிபெயர்த்துரைப்பேனுய்ந்தேன். கஉசு

திருநகரப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - உகஅ.

---

# பதிகப்படலம்.

## முதற்காண்டவுட்டொகுதி.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சிவபரஞ்சுடரைக்காண்டகுழைதச்செய்தல்விளைவியவாறும்
தவலருஞ்சிறப்பினந்தியெம்பெருமான்சனற்குமாரனுக்குவெஞ்சாப
நவையறுத்தருளிச்செவியறிவுறுத்தநலமெலாஞ்சூதமாமுனிவ
னவர்தமக்கியம்பிப்பின்னுகளுமையாட்கருளியவுண்மைசெப்பியதும்.

கன்னியாழ்க்கிழவன்வரம்பெறுகாரைக்காட்டினிற்பூசனையுஞற்றி
பின்னவிர்மணிப்பூட்சிவியெனுமலரான்வீடுபேறெய்தியவாறும்.
பொன்னுடைப்புத்தேள்புண்ணியகோடிப்புனிதனையருச்சனையாற்றி
யின்னாவேறுகைக்குமன்னனலாலிலைகையுண்டுமீட்டுதவியவாறும்.

அக்ககுமாரயோன்வலம்புரிக்கவிழ்த்துறையடியிணைவணங்குபுகளது
கைத்தலத்திழந்தசெம்மருள்சிலைப்பாகதிவளைதனைப்பெறுமாறு
மெய்த்தவபோன்பின்மலர்மிசைக்கடவுள் வேள்வியிசெய்துயர்சிவாக்கான
துத்தமனருளான்மாயனேடுலகையாண்டுபீடுதவியவாறும்.

கருகிருள்விடத்தையிறையவன்பருகக்காட்டியவறக்கடைதணப்ப
விருமறைவிதியாற்கடவுள்மணிகலன்போனையேத்தியவாறு,
மருளுறுமெருக்கிறம்பொய்யுரைகிளந்தவல்வினைகழிதரவியாதன்
பொருவருஞ்சாந்தாசயப்பெருவரைபற்பூசனையியற்றியவாறும்.

வீட்டினைவிழைந்தேழ்முனிவரும்பூசைவேறுவேறியற்றியவாறும்
கோட்டமில்கொள்கைப்பராசரமுனிவன்றிருமுதுகுன்றினைத்தொழுதோன்
பாட்டியவரக்கன்குலத்தொலைவுறயாச்செறற்றதும்விளக்கொளிமாயோ
னுட்டமூன்றுடையநாதனைப்பரவிநிதம்பெற்றோங்கியவாறும்.

ஈண்டியபுகழ்முதீச்சரம்பரசிமின்றவள்றைறையினைவிடுவித்
தாண்டகைக்குழுமஞ்சூலசெயிற்றப்பணிகளையலத்தெழுமாறு
நீண்டவனுணராததிருவடிபோற்றிவெளியுடற்பணிகளுமெழும்புன்
பூண்டுகொண்டருளப்பெற்றதோதகவாற்றுபுன்னினைவிளைவியவாறும்.

இருதிநாளிருவர்காயமேற்றுங்கிவியாழமுமயமதும்வழுத்த
மறுவறுகாயாரோகணவரைப்பாலனம்பிரான்பன்னியவாறு
மறுதணிவேணிநூஞ்சணிக்கூத்தரடியிணையருச்சனைசெய்து
தெறுபுலனவிதநசித்தரொன்னாரியசித்திபெற்றுயர்ந்திடுமாறும்.

மாதவன்பரசிப்பிருகுவன்சாபவம்பயந்தப்பெறுமாறு.
மேதகுமொருசார்முனிவரார்மதங்கன்வெண்கரிபோற்றியவாறு
ஏதமில்வெள்ளிமொழிப்படித்திகிமிடிட்டசித்தீசனைத்தொழுது
கோதறுவயிரயாக்கைபெற்றோங்கிக்குபன்றனைப்புறங்கண்டவாறும்.

அந்தணன்கச்சபாலையத்திறைஞ்சிப்படைத்திடுமாற்றல்பெற்றதுவும்
பைந்துழாய்க்கூடமமாயிடைப்பரசிப்பாதகந்தவிர்ந்துய்ந்தவாறு
மைந்துறுமாண்டுக்கன்னிமாமுனிவன்வழுத்திவானரம்பையரைவர்
சந்தனந்தினைக்குழிளமுலைப்போகந்தரைமிசைநுகர்ந்துவாழ்ந்ததுவும்.

அங்கியங்கடவுளேத்திவிண்புலத்தாரவிப்பொறைமதுகைபெற்றதுவும்
பங்கமின்றிறைஞ்சிச்சவுனகமுனிவன்வீட்டினைத்தலைப்படும்பரிசு
மங்கருவெப்புவிழியவற்செகுத்தசுரகரம்வானவர்வழுத்திப்
புங்கவர்பெருமான்சுக்கிலம்பருகுவெப்புநோய்போக்கியவாறும்.

புலிப்பதமுனிவன் காண்முனை போற்றிப்பொங்குதிம்பாற்கடல்பெற்று
வலித்திறற்பார்த்தன்வலவனே முடிமேன்மலரடிசூட்டியாண்டதுவும் [யிற்
கலித்தெழுழிமையோர்மலைமகண்மொழியாற்கரிசறத்தெளிந்தருட்குறி
சலிப்புறுழியக்கவிழ்வுகொண்டணைந்ததலைவனைத்தொழுதுய்ந்தவாறும்.

ஏதழில்பதிற்றுப்பதின்மரோடொரொன்பதின்மருமேத்தியவாறு, (23)
மாதர்மேற்றளியிற்கவிணியன்பாட்டான்மாலசிவனுருவுபெற்றதுவு (24)
மாதரம்பூப்பறிவிங்கரப்புத்தேளனேகதங்காவதம்பரசிக்
கோதறவுலகமெண்ணியாங்குதவக்கொடுத்திடழிறைமைபெற்றதுவும் (25)

மகதியாழ்முனியும்புத்தருக்கிறையும்வளம்பொழிற்றிருக்கயிலாயப்
பகவனைத்தொழுதுமுப்புரத்தவரைமருட்டியபாவமாற்றியது (26)
மிகலுநர்ச்செகுப்பவிராகவன்வழுத்தியெறும்வலியெய்தியவாறும் (27)
புகழுறுங்கற்கிபோற்றுபுகடைநாட்கயவரைப்புரட்டியவாறும். கக

நறைமலர்ப்பனந்தார்முடியவன்வழுத்திநலம்பயில்வரம்பெறுமாறு (28) [து
முறைகழன்மகவான்ஞெருழுதுசெல்லுருவாயசுதன்சென்னியைத்துணித்
திறைபெருங்கீர்த்திகவர்ந்துபீடுய்யப்பூசனைநிகழ்த்தியவாறு (29)
மறையவன்றலையைக்கொய்துவெம்பலிதேர்வயிரவன்பூசித்தவாறும். கச

விண்டுநேர்விடுவச்சேனனார்பரவியிரபத்திரனிறத்தணிந்த
வெண்டலைழங்குமாழிமையவிகடக்கத்திறைஎய்தியவாறு (31)
மிண்டினல்வேள்வியாறுறியதக்கன்வினைகெடவருச்சித்தவாறும், (32)
விண்டவர்புரத்திஹயந்திடுமூவர்தொழுதுமெய்வரம்பெறுமாறும். (33) கரு

பொன்பெயர்படைத்தோன்கிளைஞரோடெய்திப்பூசைசெய்தரசுபெற்றதுவுங் (
கொன்பயில்விடையோனருள்வழிமாயோன்மடங்கலாயவனுயிர்குடித்துப்
பின்புகுந்தருக்கைச்சரபமாய்த்ததற்பின்பிழைகெடப்பூசித்தவாறும்,
வன்புடையிரணியாக்கனையிறுத்தபன்றிபினவழிபடுமியல்பும். கசு (

அந்தகன்பரசிப்புவிமுழுதாண்டுகடைமுறையருள்பெறுமாறும், (36)
வெந்திறல்வாணனிறுதியிற்பரவிவிறற்கணத்தலைமைபெற்றதுவுங், (37)
கந்தமென்மலர்கொண்டடிதொழுதோண்காந்தனுங்கதிபெறுமாறு, (38)
மைந்துறவழுத்திச்சலந்தரன்கடைககால்விட்டின்பமருவியவாறும் (39) கஎ

கேசவன்றிருமாற்பேற்றினிற்போற்றிக்கிளரொளியாழிபெற்றதுவும் (40)
வேசறுபரசிராமனேத்தெடுத்துவெம்மழுப்படைபெறுமாறுங், (41)
தேசுறப்பரவியிரேணுகையென்பாடெய்வதமாகியவாறு (42)
மாசறும்யோகாசாரியர்தொழுதுவயங்குதம்பதம்பெறுமுறையும். (43) கஅ

சித்தசன்போற்றியுலகெலாங்காமஞ்செறித்திடுமிறைமைபூண்டதுவு
மத்தனுரேவலாற்றினலணைந்தவகிலதீர்த்தங்களும்வணங்கிப்
பைத்தபாப்பல்குல்பாகனூர்தம்பாற்பற்பலவரங்கள்பெற்றதுவுந் (44)
தத்துநீர்க்கிறைவனருச்சனையாற்றித்தங்குமப்பதம்பெறுமாறும். (45) ககூ

காசிவாழ்விசுவநாதனுங்காஞ்சிப்பெட்பினலணைந்துவைகியதும்,
பூசனையுஞற்றிக்காற்றினன்கந்தவாகனைப்பொலிவுறுமாறு,
மாசறுகோள்களொன்பதும்வழுத்தியெண்ணியவரம்பெறுமாறுங், (46)
தேசுறுவாமதேவனன்முனிவன்ஞெருழுதுவெம்பிறவிதீர்ந்ததுவும். (47) உ0

அகனுறப்பரசிமார்க்கண்டிமுதலோர்சிறப்பினைக்கடந்ததுமயன்மா
லிகலுறுசெருக்கின்வருவினைதணப்பிலிங்கமங்கருச்சித்தவாறுஞ்
சகமெலாமிறத்துமுக்கணெம்பெருமான்றங்குவீராட்டகாசத்தின்
முகினிறப்புத்தேள்பூசனையுஞற்றித்துகிர்நிறம்பெற்றிமுறையும்.

மாண்டகுகாமக்கண்ணியைவணங்கிமலர்மகள்சாபமாற்றியதும்,
பாண்டவர்முதலோர்தொழுதுநல்வரங்கள்பெற்றதும்வணங்கியீசான
வாண்டகையாசைக்கிறைமையெய்தியதுமச்சுதன்மச்சமாய்ப்போற்றி
வேண்டலர்ச்செகுத்துவேதநூல்கொணர்ந்துவேதியர்தமக்களித்ததுவும்.

மீயுயர்குறளோனவுணனைச்சிறையிற்புகுத்துமீண்டிறைஞ்சியவாறு,
மாயவன்பரவிக்கடல்விடந்தாக்கும்வெப்புநோய்மாறநின்றதுவு
நாயகியுருவிற்கவுசிகைதோன்றிநாதனைப்பூசித்தவாறுந்,
தூயமாகாளப்பாப்பரசிறைஞ்சித்தொல்லைவீடுறப்பெறுமாறும். உ௨

அண்ணலாரானைமறுத்தவெந்தீமையறுத்திடக்குமரகோட்டத்தி
னண்ணிவீற்றிருந்துசேயிலைநெடுவேலனைப்பூசித்தவாறு,
மண்ணெலாம்பரவுமார்க்கண்டமுனிபால்வஞ்சகங்கருதியமாயோன்
கண்ணுதற்பிரானையத்தலத்திறைஞ்சியவ்வினைகழுவியவாறும். உ௩

சாத்தனார்போற்றியுரிமைபெற்றதுவுமங்கணாளத்தையல்போற்றியதுந்,
தீத்தொழிலரக்கர்ச்செகுத்துவந்திராமன்பணிந்ததுந்தேவர்கோன்வலவ
னேத்தியவாறுநாரணன்பரவிப்பாப்புருவிரித்ததுமியானைக்
கூத்தனார்முழுதுங்குழலிடையொடுக்கிப்பண்டனைக்கொலைசெய்தவாறும்.

ஓவியவுலகைத்தேற்றுவாளெங்கோனொற்றைமாமூலத்தின்முனைத்துந்
தாவறுசிறப்பினிலளிதைப்பிராட்டிதனைப்பயந்தாங்கவள்விழியின் [ந்தற்
மூவரைப்படைத்துச்செய்தொழிலவருக்குதவிச்செவியறிவுறுத்துமொய்கூ
றேவியுங்கடவுண்மூவரும்பரவச்சிறப்பொடுவீற்றிருந்ததுவும். உ௪

திருவிளையாட்டான்மந்தரத்துமையாள்சிவபிரான்விழியிணைபுதைப்பக்
கருகிருட்பிழம்பினுலகெலாமூழ்கிக்கடப்பருங்கவலையுற்றதுவும்,
வருவினைதணப்பப்பூசனைபுரிவானமழையிடைச்செய்கையும்புகன்று
பெருநகர்க்காஞ்சிக்கிறையவன்விடுப்பப்பிராட்டியங்கெய்தியவாறும்.

மெய்த்தநல்லறங்கள்வளர்த்திடுமாறும்விண்டுவீச்சரமுகத்தீச,
மத்தளமாதவீச்சரம்வணங்கிப்போந்துமாந்தருவடிமுனைத்த
சத்தறிவின்பத்தனிமுதற்பொருளைத்தவத்திறுங்கண்டுகொண்டிறைஞ்சிப
புத்தமிழ்தனையாள்விதியுளிவழாமைப்பூசனையுஞற்றியவாறும். உ௫

கருணைமீப்பொங்குந்திருவிளையாட்டாலுலைத்துறுங்கம்பைநீர்ப்பெருக்கைக்
குருமணிக்குழையாள்கண்டுளம்பதைத்துக்குழகனைத்தழுவியவாறுந்,
திருமுலைச்சுவடும்வால்வளைத்தழும்புஞ்சிவபிரான்பொலிவுறப்பூண்டு
மருமலர்க்குழலாள்காணமுன்னின்றுவரம்பலவருளியவாறும். உ௬

இமவரைப்பிராட்டிகவுரமாநிறம்பெற்றெம்பிரான்வதுவைவேட்டதுவு
முமையவள்காளவுரியினிலுயிர்த்தவொளியிறையவுணரைமாட்டி
விமலநாயகன்றனருள்பெறுமாறுமேதகுவிம்பிதத்திறமு
மமைவரவொழுகுமொழுக்கமுமெய்கோனருட்சிவபுண்ணியப்பேறும்.

## இரண்டாங்காண்டவுட்டோகுதி.

மற்றுமோராற்றாற்கிளந்திடுந்திறத்தின்மால்வரைக்கயிலையினுமையாள்
கற்றையஞ்சடையார்விழியிணைபுதைத்துக்காஞ்சியிற்பூசனையாற்றும்
பெற்றியுமந்தார்வேதியுங்கரிகால்வளவன்கோன்பெருமையும்வினைநோய்
செற்றிடுந்தீர்த்தமுதலியமூன்றின்சிறப்புமீண்டியம்பிடப்படுமால்.

பதிகப்படலம் முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௩௨

---

# புராணவரலாற்றுப்படலம்.

---

### நைமிசாரணியச்சிறப்பு.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மிடல்கெழுதவத்தோர்வேள்விசெய்வினைக்குவேண்டியவேண்டியாங்குதவ
கடவுளான்பயிலுங்காட்சியாலவியூண்கைக்கொளத்துதைந்தவானவராற்
றொடர்வுறுமோமப்புகைதழீஇச்சுரும்பருளர்தராப்பன்மலர்ப்பொழில
லடர்தருங்காமர்கற்பகவனமேயாயதுநைமிசாரணியம்.

தாதவிழ்கடுக்கைநறுந்தொடைமிலைச்சுந்தம்பிரானடியலதுணரா
மாதவரியற்றுமகவினைசிதைப்பவருகருந்தயித்தியரவர்தங்
காதுவெஞ்சாபவலிக்குடைந்தோடுங்காட்சியேகடுக்குமம்மகத்தி
மீதுயர்ந்தண்டச்சுவர்த்தலமுரிஞ்சவிசும்பெழூஉநறும்புகைப்படலை.

கருந்திரையளக்கர்கடைதொறுமெழுந்துகனையிருள்பருகுவெங்கதிரோ
னிருந்தவர்வேள்விக்களத்தவிப்பாகமேற்பவந்தணுகுவோன்மான
மருந்தெனக்கிளைத்துவானுறநிவந்தவளம்பொழிற்கிளைகளைக்காத்தூ
திருந்தறவொதுக்கிக்குனிந்துபுக்குலாவிச்சேணிடைப்போய்நிமிர்ந்துறுமால்.

சிறகர்வண்டிமிரும்வட்டவாய்க்கமலச்செழும்பொகுட்டரசுவீற்றிருக்கு
மறைமுதல்கிழவன்முனிவரர்வேண்டவளைத்தனன்விடுத்தபொன்னேமி
பிறவுருதின்றுமாயினையுறைவதெனக்கவின்காட்டிடுந்தேத்தீ
பறைநரச்செறிந்துநறவமூறற்றெறுக்குமரும்பெறன்மதுவிருலவலயம்.

விரும்பியவிடபந்தாங்குதோற்றத்தால்விளங்கெரியுருவினிற்பூத்த
வரும்பணிகொண்டகாட்சியாற்பெரியவரையவணிருந்தவராக
விரும்புவியுய்யக்கோடலால்யாருமேத்திடும்பெற்றியாலுலவாப்
பெரும்பெயர்க்கயிலைக்கடவுளேபோலும்பிறங்கொளிநைமிசக்கானம்.

இசைமுகனுந்தியுறவளைநேமிசேர்ந்திடுங்கொள்கையாலென்று
மசைவில்வானவர்க்குப்புரையறுவியமிழ்தமளித்தலாற்பூமணம்பெறலால்
வசைதபுகாட்சிக்கருநிறக்குருவிமழைமுகின்மேனிவந்தழகா
யிசைதலாற்சார்ங்கமேந்தியோனிகர்க்குமிணையிலாநைமிசக்காடு.

குலவுநால்வாய்க்கண்மருவலாலுகலங்கொண்டமுந்நூல்வயங்குதலாற்
சலமறுவேதமொழிதலால்வனத்துத்தாமரையிருக்கைமேவுதலாற்
பலபொறிச்சுடிகைப்பையராச்சுமந்தபாரவைசூழ்புடவியேமுதலா
மலர்தலையுலகமுழுதுமீன்றளித்தவள்ளல்நைமிசப்புறவம்.

மகம்.

எச்சமொன்றேயிருமையினுமேலாமிமையோர்க்குவப்பாவ
தெச்சமொன்றேமகத்திறையாமெம்மான்விழையப்படுவதுவு
மெச்சமொன்றேநனிசாலச்சிறந்தபொருளுமிருங்கரும
வெச்சநிகர்வேறில்லையெனப்பரத்துவாசனியம்பினனால். ௧௭

மகவு.

மகவேமேலாங்கதியாக்குமகவானுலகந்தனைவெல்லு
மகவின்மகவான்முடிவின்மையெய்துமகவின்மக்களித்த
மகவான்மேலைப்பதமுறுந்தென்புலத்தார்கடனைமாற்றுவது
மகவானன்றியில்லையெனவகுத்தான்றெரித்துக்கண்ணுவனே. ௧அ

துறவு.

துறவேயறங்களெவற்றினுக்கும்பெரிதாம்விடையூர்தோன்றலுக்குந்
துறவேயுவகைவரச்செய்யுந்துறவேயயன்மாலுலகளிக்குந்
துறவேயீசனிடத்திருத்துமேவருமேலாச்சொல்லுவதுந்
துறவேயாமென்றெழுந்துநின்றுசொற்றான்சைவத்துருவாசன். ௧௯

சூதபௌராணிகர்வரவு.

வேறு.

இன்னவாறுபன்முனிவருமியம்பினர்பிணங்குழியிவரிட்டு
நன்னர்வான்றவங்கொணர்ந்தெனவாயிடைநணுகினன்விடையூரு
மென்னையாளுடையிறையடிதைவருமிடையறுத்தியானத்தான்
பன்னுமெய்த்தவப்பராசரன்பயந்தருள்பண்ணவன்மாணாக்கன். ௨௦

விளங்குநீற்றொளிகதிர்செயவீங்கிருளக்கமாலிகைவீசும்
வளங்கனிந்தபொன்மேனியான்புண்ணியம்வடிவெடுத்தெனவந்தான்
றுளங்குறுதுயர்புராணமுற்றளந்தறிதொலலையோனமரர்க்காக்
களங்கறுத்தவனுண்மைதேர்ந்துயிர்க்கெலாங்கருணைகூர்ந்தருள்சூதன்.

முனிவர்வினா.

புக்கசூதனைமுனிவரர்யாவரும்பொங்கியபெருங்காதன்
மிக்கவோகையினெதிர்கொடுபூசனைவிதியுளிவழாதாற்றிந்
தக்கவாதனத்திருத்தினர்வினவுவார்தாகணைம்புலவாழ்க்கை
யொக்கநீப்பயாமுன்னரேயருந்தவமுருந்றினமதனாலே. ௨௨

வென்றிவெள்விடைப்பிரானடிகாணபதேவீடுபேற்றினுக்கேது
வென்றுதேறினங்காண்பதற்குபாயமற்றிதுவெனத்தெளிகில்லே
மொன்றலாதனவேறுவேறுரைத்தனமுயங்கினம்பிணக்குற்றே
மன்றகண்டிலேந்துணிவுமெய்யுணர்விஞன்மலக்குறும்பறச்செற்றோய்.

எங்கள்பாக்கியப்பயனெனநீயிவணெய்திடப்பெற்றேம்யாங்
கொங்குயிர்த்ததார்த்துளவனேவியாதனக்குலமுனியருளாலே
பங்கண்மூவறுபுராணமுழுமுணர்ந்தனையறமுதல்பொருள்ணன்கிற்
பொங்குசீர்த்தியோய்நீயறியாததுபுவனமூன்றினுமில்லை. ௨௪

ஆதலாற்பலநெறியினுந்துணிந்தவாறான்றிருவடிகாண்டற்
கேதுவெங்களுக்கருளுதியறிதுநீயேகலையுயர்வானிற்
பாதவம்பொரப்பெரியவர்காட்சியும்பயன்படாதொழியாதாற்,
சூதமாதவவென்றலுமிகத்களிதுளும்பியோதுவன்சூதன். ௨௫

# காஞ்சிப்புராணம்

குரவுமாதவியுமிலைமந்தாரங்குருந்துபாடலம்பாலைமுந்திரிகை
மருதுபோதிபிடாரெனுமையோமைவஞ்சிகாஞ்சிகுங்குமநமையியாடுவா-
ணரைதளாவுதிசெருந்திசேவிகிளமகில்பலாசுசந்திலலமாவில்லம்
வரைதமாலமாதளைகணியதிங்கம்வகுளமின்னனநெருங்கினவோங்கும்.(6)

அன்றினார்புரமழலெழநகைத்தவண்ணல்சேவடிக்கன்புறுவியல்பிற்
றுன்றுமெய்த்தவயோகியர்க்கெல்லாந்தூயநற்றவச்சாலையுமாகித்
தென்றலூர்தரப்பூமணங்கஞலத்தெளிபுனற்சுனையளவிலகவின்று
பொன்றிடாக்கடவுளர்முதலோர்க்குப்போகபூமியுமாயதப்பொருப்பு.(7)

அங்கண்வாழ்தருமயன்மனைக்கிழத்தியங்கொப்பணின்றருந்தவஞ்செயல்போற்
கொங்குலாந்துவர்ப்பங்கயத்திரைதேர்குறிப்பினேத்திமிசைவற்றிருக்கும்.
பொங்குவெண்டிரைத்தீர்த்தத்தின்மாடேபுரங்கடந்தவர்வரமுவட்குதவித்
தங்குகாட்சியினறுமலர்பொதுளித்ததைகடுக்கைபொன்சொரிவனவுடைத்தால்.(8)

மீதுசந்திரசூரியர்கிரணம்விரவலாமையினொருபொழுதலர்ந்தோர்
போதுகூம்புமச்செய்கையாங்கின்றிப்புரிமுறைக்குடைநசென்றுமோரியல்பிற்
கோதில்பன்மணிக்கதிரொளிவருடக்குளிர்ந்தலர்ந்திரண்டவத்தையுங்கடந்து
மாதர்வெண்பிறைக்கண்ணியரடிசேர்மாந்தரொத்துளவளஞ்சுனைமலர்கள்.(9)

வென்றவைம்புலவாரங்கையர்வடிவின்விளங்குபூதியும்விரைகமழ்கடாத்த
குன்றுபோலுயர்களிற்றுநீள்கோட்டுக்குலவுமுத்தமும்வேயுகுமணியுந்
துன்றிவானிலாக்கற்றைகால்வெண்மைதூயபொன்மையைவிழுங்கியதேயோ,
வன்றியவ்வரைப்பொன்மையேவெண்மைதனைவிழுங்கியதோவதுவறியேம்.(10)

இனையசீர்பெறுசதசிருங்கத்தினெண்ணிலாப்பெருவளத்தனவாகி
நனைமலர்ப்பொழில்சணபகஞ்சரளநரந்தந்தெங்குகோங்கரம்பைகளுடுத்து
வனசநீள்சுனைமல்கியபிரமவனமொன்றுள்ளதுமற்றதனைப்பட்
டனைநிகர்ப்பதுநான்மறைக்கிழவன்றனமாயதுபிரமமாநகரம். கக

## சனற்குமாரமுனிவர்யோகுசெய்திருத்தல்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொற்பமரினையநகர்க்கொருபாங்கர்ப்பொங்கொளிமடங்கலேறென்று
பற்பலமடங்கல்சூழவீற்றிருக்கும்பரிசெனத்தவர்நீற்றொளியி
னற்புதக்கோலத்தறிஞர்சூழ்ந்தேத்தவருட்சனற்குமாரமாமுனிவ [னாள்.
னெற்பணிப்பெருமான்சரணுளத்திருத்தியோகுசெய்திருக்குநாளொரு

வைகறையெழுந்துகங்கைநீராடிவானவர்முனிவர்தென்புலத்தார்
செய்கடனுவப்பத்தெண்புனலிறைத்துநியமசமுத்தியானமுமாற்றிப்
பொய்களைவிரசையங்கியின்விதியாற்பூத்தநீறங்கையினெடுத்து
நைகரந்தீர்ந்தவன்பொடுதியாசநடைபெறுதியானமுன்னுக.
அடைவுறப்பஞ்சப்பிரமமந்திரத்தாலங்கியென்றற்றொடக்கத்தான்
மொழிவிற்சாபாலிநனுக்களேழாற்றான்மிவிரண்டதர்வமந்திரத்தால்
வடிவுறுமிடக்கைவைத்துமுன்முக்கான்மந்திரித்தறவிளுற்குழைத்துக்
கழுகெழுசென்னிமுதலிடிகாறும்பிரமமோரைந்தையுங்கழறி.

நிறையவுத்தூளஞ்செய்துபின்றிரியம்பகங்களாளிகழ்த்துமஞ்செழுத்தா
லுறவிளைசமித்துப்பின்னருந்திரியாயுடந்திரியம்பகமனுவான்
முறையினஞ்செழுத்தாற்புண்டரமூன்றுமுச்சுடர்முக்குணமும்மை
மறைகண்மூவலகுமுந்நிறமுத்தீவடிவெனச்சிந்தையிற்கண்டு. கஉ

அதுசனற்குமாரன்யோகினில்வைத்தகருத்தினூஉறிந்திலனாகிக் [டு
கதுமெனவிருக்கையெழாமைகண்டெம்மான்கருணைகூர்ந்துமையவளோ
விதுவணிசடிலத்தெம்மையேயுளத்தின்விழைதரவிருத்திமற்றெம்பாற்
பொதுவறவொருக்குமனத்தினனென்னைப்புரிவொடுங்கோயில்புக்கனனால்.

சனற்குமாரமுனிவர்சாபமேற்றல்.

நந்தியெம்பெருமானோக்கினன்வெகுண்டலகிலாவொட்டகமேபோ
லந்திலெம்பிரானையிகழ்ந்திருந்தனனாலவ்வுருவாகெனச்சபிப்பச்
சிந்தைகூர்முனியுமொட்டகமாகிச்செழுநிலத்துழிதருகாலை
முந்தைஞான்றியற்றுநல்வினைப்பயனான்முன்னினன்கச்சிமாநகரம். ௨௭

பிரமன்கச்சபேசரைப்போற்றல்.

ஆயிடைக்கச்சபேசனுழிறைவனமர்ந்தருள்கோயிலின்மாடே
காயுமைம்பொறியினுலகெலாம்படைக்குங்கருத்தினன்மலரணைப்புத்தே
ணீயமாதவத்தினினிதுவீற்றிருக்குஞ்சூழலினணுகுதலோடுந்
தீயபாவத்தினொட்டகவடிவாஞ்சிறுவனைக்கண்டனன்றாதை. ௨௮

பாவடிநெடுங்காற்றிரையெழுதோல்வாய்ப்பழியுடனெளிந்துநீள்கழுத்தி
யாவருமிழிக்குமொட்டகயாக்கையிளவலைநோக்கிநின்றந்தோ [ன்
சேவுயர்கொடியானடித்தொழும்பாற்றுந்திருவருட்குரியனாமிவனுக்
காவவென்செய்கோவென்மகற்கிதுவந்தடுத்தவெவ்வாறெனவெண்ணி.

யோகினைக்கூடிமுன்னிகழ்வினைத்துமுணர்ந்தனனவ்வினைதவிர்ப்பா
னாகமமுறையாற்கச்சபேசன்பாலடைந்துபூசனைசெய்தேத்தெடுப்பான்
மாகர்போற்றிசைக்குமிளம்பிறைமோலிவள்ளலேயுலகளித்தழிக்கு
மேகனேயாமையுருவொழித்தரியையாண்டநின்னிணையடிபோற்றி. ௩௦

காசிகேதாரம்புட்கரங்குருக்கேத்திரங்கடிநைமிசங்களினு
மோஉசைகொள்காஞ்சியதிகமென்றுரைப்பதுரைப்பிரமாணமொன்றன்று
வீசனேநீயுமுமையுமேயல்லாலிந்நகர்படைத்தவரில்லை
தேசுறயானேகண்ணுறக்கண்டுதெளிந்ததாமெந்தவூழியினும். ௩௧

புரியுநின்னருளாலுயர்ந்தவரனேகர்புரவுபூண்டொட்டுருவெடுத்தோய்
வரிவிழியுமையாண்மணந்தபேரின்பவடிவமேயிடும்பைநோயறுக்குங்
கருணைவாரிதியேயிரங்கிடாயெமக்குக்களைகணீயன்றிவேறிலையென்
றிருகணீர்சொரியநெக்குநெக்குருகியேத்தினனைத்தழுவபேற. ௩௨

கச்சபேசர்காட்சி.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

இசைமாமுகன்வாழ்த்தொலியஞ்செவியிற்சென்றேறவுமாருளுந்துதலான்
மிசைவானவர்பூதகணம்புடையின்மிடையப்பெருமானெதிர்நின்றருளி
வசைதீர்தரவேட்டவரந்தருகேமைந்தாவுரைசெய்கெனவாய்மலர
விசைபாடினனோக்கருளும்பிடநின்றிதுகூறுதலுற்றனன்வேதியனே.

நின்றூண்டுவெழாதவனென்புதல்வனீடுந்தவமுற்றுசனற்குமரன்
முன்றின்கதகோட்டிடைநின்னிருதாண்முன்னிச்சிவயோகுமுயன்றிருவத்
தொன்றும்பொழுதாயிடைவந்தநுணர்ந்தானன்னிட்டைகருத்துறலா
லன்மனக்கருணைக்கிசைபித்தனுமொட்டகவாக்கையனாயினனே. ௩௩

ஆங்கதுபுலவாற்றுன்ழுருளினையவற்றுள்ளும்
தீங்கறவெளிதிற்கூடுமுபாயமுஞ்செப்புகென
வோங்குசீர்ச்சனற்குமாரனுரைத்தலுஞ்செவிமடுத்து
வீங்குபேருவகைபூப்பவிளம்புவானந்துமெய்யங்கோன். ௪௪

## நந்திதேவரனுக்கிரகம்.

அருள்பெறுசனற்குமாரனறுமுகன்கூறென்றுன்னைச்
சுருதியிற்கிளந்தவாற்றாலறிவினிற்றாயைமுற்று
மிருளறவுணர்ந்தாய்நீயேயிருந்தவத்தலைவகேட்டி
மருள்தீர்ந்துலகமுய்யவினையதுவகுத்துச்சொலவாம். ௪௫

அந்தணரரசர்நாய்கரிருபிறப்பாளர்வேத
மந்திரக்குரியோர்நான்குவகைநிலையிவர்கட்கென்ப
நிந்தையில்பிரமசாரிநிலையுயர்மனையின்வாழ்க்கை
சுந்தரவனத்தின்வாழ்க்கைதுறவறமுநான்காமால். ௪௬

கருநிலைக்கெட்டாமாயுள்பதினொன்றுகருதீராறும்
வருடத்தின்மறையோராதிமூவர்க்குமறையினுசான்
றெருளுபநயனஞ்செய்வன்முனிவர்தங்கடன்றீர்த்தற்கு
பொருவிலாமறைகளங்கமோதுதற்பொருட்டுமன்னோ. ௪௭

ஆங்கதன்பின்னூர்க்காமுறம்பொருட்பேற்றினோடு
மோங்குசீர்ப்பிதிரர்விண்ணோர்கடன்களினழிவும்வேண்டி
மாங்குயிற்கிளவிமின்னேரனையாயைமணப்பர்பின்னாத
தாங்கரும்வனத்துச்செல்வர்தவமிககிடைத்தல்வேண்டி. ௪௮

கடனெலாம்விண்டபின்புகருதருந்துறவிற்செல்வர்
நடலைசூழுலகவாழ்வைவெறுத்துநல்லறிவுதாய்தா
யிடனுடைத்துறவிறைவன்றேயிருவகைநியாயத்தோடு
மடனறநன்னூலபற்றிமறைமுடிவுணர்தல்வேண்டும். ௪௯

இருவகைநியாயம்பூர்வமுத்தரமெனப்பேராய்து
மொருவகைசிவபூசைக்காமொருவகைசிவப்பேற்றுக்காம்
சுருதியேயிலிங்கஞ்சாரசீராமவுடத்துககோளிட்டேசொல்லின்
வரும்பொரிவற்றைன்மன்னைமைவன்மையுமிவற்றையாய்தல். ௫௰

கட்டபுபூசைபூர்வகருமநூனியாயத்தாகும்
மொட்டகமீறப்பயாசம்பூர்விதைபன்மொழிசாலு
மெனடுத்துரையருத்தவாதமிவைசிவப்பேறுகூறற்
கடுத்தவுத்தரநூனுண்மைதுணிவதற்கியகமாமால். ௫௧

இரவொரியாடுந்தேவையிம்முறைதுணிந்தஞானி
பிரணவமனுவாற்போற்றிப்பேதுறுதுடலகாங்காறும்
பரவிடினவற்குமுகக்ட்பரன்வெளிப்படுவனபட்டான்
மருவுபேரின்பந்துய்த்துவிமலனில்வாழலாமே. ௫௨

பின்னவுன்மாயவாழ்விற்பிறந்திறான்சிவமேசேர்வன்
முன்னருஞ்சிவப்பேற்றிற்குமுறைவருமுபாயமீதா
மிங்கெறிச்சிறியோர்யார்க்குமெளியதன்றெளிதாய்நேரா
முக்கெறிமுக்கணெம்மான்பதிகளினமர்தலாகும். ௫௩

திசைமுகனுலஞ்சிக்கப்படுதலினுற்காஞ்சியெனத்திசையோய்மல்கு
புழிசையுடையதிதுபிரமலோகமென்றமிழிதனுற்பேரெய்துமாற்ரு
ணசைவிலாதிங்குறைவோரெல்லார்க்கும்வீடுதவுமவ்வூர்நாப்பண்
வசையின்றித்திப்பியமாய்ப்புண்டரிகம்போலெமக்குவயங்குங்கோயில். ௨௭

அங்கதனிற்சோதிலிங்கவடிவாகியாமென்றுமமர்வேமிவ்வூ [ரூன்
றிங்கிரண்டாமுறைவிளம்புஞ்சந்தோசாமுறையெம்மையோளிவானென்
றுங்கநகர்தனைப்பிரமபுரமென்னுமிறுதிமறைசுவர்க்கமென்னும்
பங்கமறுதயித்திரியஞ்சோதிசூழ்சுவர்க்கமென்பகாநிற்கும். ௨௮

அப்பிரமபுரங்காஞ்சிநகரல்லால்வேறில்லையாகுமென்றே
செப்புமபரிமிதமெலாஞ்சிவர்கமங்களொடுமுழக்குஞ்செல்வீயிந்த
வைப்பினைச்சேயிடையாணுமாயிடையாயினுமிருந்துவணங்கிற்கண்ணி
லெப்பெரும்பாவமுநீங்கிவீடெய்துமுனகருண்மையியம்பினேமால். ௨௯

எனவிறைவனுலகுயயவினைவுமலைப்பெருமாட்டிசுகியம்பும்வாய்மை
யன்றுவினவியசனற்குமாரனுக்குத்திருநந்தியறைந்தானன்னேன்
வென்றபொறிவாதராயணற்குரைப்பவவனெனக்குவிளம்பலசெய்தான்
குன்றனையபெருந்தவத்தீர்சிவனைக்காண்பதற்கேதுவிதுவேகொண்மின்

பரவருமந்தணமாகுமிக்காதைமெய்யன்பிற்படிப்போர்கேட்போர்
கரிசுறுநோய்நீங்கிநெடுநாட்புவியினமக்களொடுங்களித்துவாழ்ந்து
வீரகுணராயமறுமையினும்பெரும்போகமினிதுண்டமாமுத்தி
விரவுவரென்றுளங்கொள்ளச்சூதமுனிமுனிவர்க்குவிளம்பினனால். ௩௰

தலவிசேடப்படலம்முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௪௪௪.

## 4 திருநெறிக்காரைக்காட்டுப்படலம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மெய்த்தவர்யாவருமங்கதுகேட்டுவிழிக்துணைநீர்வாரக்
கைத்தலமுச்சிமுகிழ்த்துமயிர்ப்புளகங்கண்மலிந்துயர்வார்மே
முத்திபெற்றற்குயர்காரணமின்றுதொகுத்துமொழிந்கனைநீ
யதலமேன்மையனைத்தும்விரித்தருளென்றலுமச்சூதன். க

சுத்தியுளெண்ணறுதீர்த்தநிறைந்துளகாமுறுபலதானம்
பொச்சமிலபோகமும்வீடுமளிப்பனபோக்கருமேன்மையவா
மச்சமறுத்துவியாதனெனக்கருள்செய்தமுறைப்படியே
யிச்சையினேதுவலந்தணிர்கேண்மினெனச்சொலலுற்றனனால். உ

இந்நகரிற்புகல்சத்தியமாவிரதப்பெயரிற்குணபாற்
றன்னிகர்மெய்த்தலமொன்றுளதங்கமர்சத்தியவிரதீச
ரென்னையுடைப்பெருமாட்டியுமோரிருமைந்தருமுடன்மேவ
மன்னியிருத்தலினத்தலமேன்மையையாவர்வகுக்கவலார். ௩

சத்தியசத்தியர்சத்தியசோதகர்சத்தியசங்கற்பர்
சத்தியகாமரிருத்தலினப்பதிசத்தியவிரதமதாஞ்
சத்தியநன்னெறியார்க்கும்விரைந்தருள்செய்துறுதானமதிற்
சத்தியமாவிரதக்கடமொன்றுளதக்கடநீராட ௪

புதனமர்காளினிவீர்க்கடனுதிபொருந்தமுடித்தங்க
ணிதமுறுசத்தியமாவிரதீசரையேத்திவணங்குவர்தாங்
கதவினைதீர்ந்தருளுநண்மையுணர்ந்துகலப்பர்கண்முத்தியினை,
மதமுறுகாமமயக்கமனைத்துமறுத்துயர்முனிவீர்காள். ௫

மனைவியர்மக்கணிலங்கலைசெல்வமுமற்றெலைவேண்டினு
மனையவைமுற்றுமளித்துயர்வீடுமளித்திடுமத்தீர்த்த
மினையதட்டம்பதியிந்திரதீர்த்தமுமிந்திரபுரமுமெனப்
புனைபெயரும்பெறுமப்பெயரெய்தியகாரணமும்பகல்வேன். ௬

இந்திரனுற்றதுக்கை.

முதுமலராளிதன்மேதகுகற்பமும்வராகமதூறுமாறு
முதுமனுவந்தரகாட்சிவியன்பெருருவாசவன்முன்னுளனால்,
விதுவினையொப்புனராழ்பையராகியமென்குமுதங்களிடைப்,
பொதுவறுதானவமாக்கடலுக்குவடாமெதரிசனல்போல்வான். ௭

கடவுளர்சேனைப்பங்கயபானுகற்சிறையரிவயிரப்
படையவனோர்நாட்கடவுளவைக்கட்பாசிறைவெதிர்பொருதோட்
படவரவல்குற்சசிபுடைமேவப்பன்மணியரியணைமேல்
வடிவமடங்கன்மேலொர்மடங்கல்போன்மேவைனஞால். ௮

இருபுடைவெண்கவரித்தொகைதுள்ளமிசைக்குடையெழில்செய்ய
விருதுகண்மாகதர்சூதர்முழக்கவியன்மணிமாநிதியைர்
தருவொடுதேனுவிழிக்கடைநோக்கினைநோக்குபுதலைநிற்ப
வருகுறுகின்னரர்யாழுமிழ்தந்தெசவியாரவிருந்தயர.

மணங்கமழ்தோளணிகற்பகமாலைதுளித்துமதுப்புனல்பாய்ந்
துணங்கருமின்பவிழிப்புனலொப்புவுறைத்துவிழிக்செல்லா
மணங்குபுரிந்திடல்கண்டுபுலர்த்துநர்போலவிர்சாந்தாற்றி
நுணங்கிடைமங்கையரோவறவெங்கனுநொய்திளைசைத்தனுக. ௰

அரம்பையுருப்பசிமேனைகைமுதலியவரிமதர்விழிமடவார்
நிரம்பியகாமகலங்கனியவிநயநெறிமுறைகரமசையப்
பரம்புமிடற்றிசைவிம்மிடவிழியிணைபுடைபெயர்பயில்விறைும்
வரம்பெறுமற்புதமின்னவிர்கொடியெனமகிழ்நடமெதிர்புரிய. ௧௧

மருத்துவர்வானவர்கின்னரர்சித்தர்வசுக்கண்முருத்துக்க
ளுருத்திரர்சாத்தியர்கந்தருவத்திருடிக்கணவக்கோள்க
டிருக்கிளர்மெய்த்தவர்யோகிகள்கையிணைசென்னிமிசைக்குவியா
நெருக்கினுளெய்தியிறைஞ்சிமருங்குறநிரல்படநிற்பவரோ.

கணங்கொடயித்தியர்யாவரும்வந்துகடைத்தலைவாய்தலின்மாட்
டுணங்குபுசெவ்விகிடைத்திலர்நிற்பவொழிந்தவர்தங்குறைதீர்த்
தணங்கருமின்பவெள்ளத்திலழுந்தியளப்பருசெல்வத்தா
னிணங்கலர்கோளரியின்னணமேவுழியெண்ணினனிவையெல்லாம். ௧௩

இந்திரனரசியலைவெறுத்தல்.

இருவினையொப்புவாய்ந்தபருவம்வந்தெய்தலாலே
மருவருந்துறக்கவைப்பினரசியல்வாழ்க்கைதன்னை
யருவருத்தவர்த்துக்காவற்சிறையிடையகப்பட்டோரின்
வெருவரும்பதைக்குமஞ்சும்வேறிவைகருத்துட்கொள்வார். ௧௪

அழியுழிவ்விடயவாழ்விற்களித்திருக்[illegible]தாகெட்டேன்,
பழிபவக்கடலிற்காலப்பாந்தள்வாய்க்கிடக்குநானேன்
வழிமுறையறியாமாயவல்லிருட்புகேர்ச்சேற்று
ளிழியுமூர்ப்பன்றியேபோலுழந்தவென்னறிவுநன்றால். கரு

அருவினையுலகமெல்லாம்படைத்தளித்தழிக்குங்காலங்
கருவுறுமெவையுங்காலவயத்தவாங்காலந்தான்மற்
றொருபொருள்வயத்ததன்றாலுங்கியோன்கற்பத்தீரேழ்
பொருவிலிந்திரர்களுமாய்வர்பொன்றுவர்மனுக்களாமும். கசு

ஓதுழிக்கற்பம்வேதற்கொருதினமுங்காண்முப்ப
தாதலோர்மதியாந்திங்களீராறிரண்டாயினண்டா
மேதமில்வருடநூறேலிருவகைப்பரார்த்தமாகப்
போகரும்போகிலன்னுன்பொன்றுவன்மன்றமாதோ.

அம்மலர்க்கிழவன்காலமரிக்கொருதினமன்னோனு
மம்முறைதிங்கள்கூடியாண்டுநூறெய்திற்பொன்று
மம்மவோசீசீயிந்தவனித்தியவாழ்வுவேண்டே
னம்மையில்வீடுபேற்றிற்குபாயமேயறிதல்வேண்டும். கஅ

எண்ணருந்தவந்தானங்கள்பட்டினியெச்சந்தானே
புண்ணியநன்னீராடப்போதலோமுத்திக்கேது
நண்ணுமிவ்வனைத்துந்தேறநமக்கெலாங்குருவாம்பொற்பே
ரண்ணலேவினவுதுமென்னத்துணிந்தனனமரர்கோமான். ககூ

அவையகத்துள்ளார்க்கெல்லாம்விடையளித்தெழுந்துபோந்து
நவையறவிரைவினந்தப்புரத்தினைநணுகியங்கட்
புவிபுகழ்குரவற்கூவிப்போற்றிநின்றிதனைவிள்வான்
சிவியெனத்திசைபோங்கீர்த்தித்தேவர்கட்கிறைவன்மன்னோ. உ௦

இந்திரன்தேவகுருவிடம்முறைகூறல்.

இவ்வரசியற்கைதன்னிலினியெனக்காசையில்லை
யவ்விதிமுகுந்தனேனோர்வாழ்க்கையுமவாவுகில்லேன்
மெய்வகையுணர்ந்துமுத்திமேவுதற்குபாயமொன்று
செவ்வனேநேர்ந்துரைத்தியென்னத்தேசிகன்றேர்ந்துசொல்வான். உக

இந்திரனுக்குதேவகுருவுபதேசித்தல்.

நன்றுநீவினையமுத்திகற்றவம்வேள்விதானங்
கன்றுபட்டினிவேறென்றாற்காண்பரிதாகுமைந்தா
துன்றியமாயவாழ்க்கைத்தொடக்கறுத்துய்யக்கொள்வா
னொன்றுமெம்பெருமானுள்ளானவன்றிறமியம்பக்கேட்டி.

கலிவிருத்தம்.

குறைவிலாமுங்கலக்குணத்தனைதலி
னிறைமலமறுதியினீங்கிநிற்றலி
னறைகுவர்சிவனெனவறிவின்மேலவ
ரிறையவன்பெருமையையாவர்கூறுவார். உஉ

மேலெனப்படுவனவெவைக்குமேலவன்,
மாலெனப்படுவனவெவையுமாற்றுவா
னாலெனப்படுவனவெலாமுவன்றவன்
வேலெனப்படும்விழிபுரகமேவினன். உங

விதியுளிமுடித்துநித்தியநைமித்திகம்
புதியநீறுடலெலாம்பொதிந்துபுண்டர
மதிநுதல்விளங்கிட்டக்கமாமணி
நிதியெனப்பூண்டுகலலொழுக்கநீடியே. ௧௫

தெள்ளொளிப்பளிங்கெனச்சிறந்தசெவ்விசால்
வெள்ளொளிச்சத்தியவிரதநாதனை
யுள்ளகக்கமலத்தின்வழிபட்டுண்மையா
னள்ளலர்க்கடந்தவமுத்திநண்ணுவர். ௧௬

என்றலுமிந்திரனிறைஞ்சியென்கொலோ
வென்றிகொள்சத்தியவிரதங்கேள்வியாற்
றொன்றுளதொடர்புபோழ்துமென்மனஞ்
சென்றுபற்றியதெனக்குரவன்செப்புவான். ௧௭

உள்ளதுகூறினேயுமையாயிடை
யள்ளிலைக்குலிசநீயணைந்துபுந்திநாள்
வெள்ளநீர்ச்சத்தியவிரதமூழ்கியின்
டெள்ளரும்வினைகள்கடிறைமையெய்தினை. ௧௮

ஒருபொழுதாடினாரும்பர்கோனிட
மிருபொழுதயனிடமென்னமுப்பொழு
தரியிடநாற்பொழுதாயின்முத்தியே
மருவுவர்யாரதன்வண்மைகூறுவார். ௧௯

புந்திநாண்முழுகுநர்புகுவர்முத்தியி
னந்தநாண்மூழ்கலிலரசநீயுமிப்
பந்தமில்வீடுறப்பாலையாயினை
மந்தணமிதுமெனக்கேட்டவாசவன் ௨௦

இப்பெருந்தீர்த்தநீரெழுமைநான்றுனு
முப்புதவாரநாணிகமாயதென்
செப்புதியென்றலுந்தேசிகப்பிரா
னெப்பறுகருணையினுரைத்தன்மேயினான் ௨௧

சத்தியவிரதர்புதனுக்குவரமருளுதல்.

தொசசகக்கலிப்பா.

மதிக்கடவுட்கானதனைமணந்தீன்றமகவான
புதக்கடவுள்கிரகநிலைபெறுவதற்குப்புரிதாதை
கதித்துரைத்தமொழியாறேகருதருஞ்சத்தியவிரதப்
பதிக்கணணைந்துயர்தீர்த்தம்படிந்தாடித்தவஞ்செய்தான். ௨௨

மேதகுசத்தியவிரதப்பெருமானும்வெள்விடைமேன்
மாதுமையாளுடனேறிவயக்கரிமாமுகனிளையோன்
காதல்புரியருணந்திகணநாதர்புடைசூழ
வாதரமோடெழுந்தருளித்திருக்காட்சியளித்தருள. ௨௩

கண்டுபரவசனுகிக்கைதொழுதுபெருங்காதன்
மண்டியெழமயிர்சிலிர்ப்பமனத்தடங்காப்பேருவகை
கொண்டுநிலமுறவீழ்ந்துகுழைந்துருகிவிழிதுளிப்பத்
தொண்டனேனுய்ந்தேனென்றெழுந்தாடித்துதிசெய்வான். ௨௪

நெடியோனுமலரவனுநேடரியதிருவடிக
ளடியேனுக்கெளிவந்தருட்கருணைத்திறம்போற்றி
யொடியாதவெண்குணங்களுடையானேயெனையுடையாய்
கடியார்சத்தியவிரதநாயகநின்கழல்போற்றி. ௭௰

என்றேத்தியெந்தையெனையாண்கிரகமிலைபெறவுங்
குன்றாதுன்றிருவடிக்கீழ்மெய்யன்புகூர்ந்திடவு
மின்றாதியென்வாசத்தித்தீர்த்தம்படிந்துபொரு
வென்றோர்முன்னையினிரட்டிப்பயனெய்திவிடுறவும். ௭௧

வேண்டுமெனவிரந்தேறப்வளித்தருளிவெள்விடைமே
லாண்டகையங்ககலாறனனலைாறுமுதலத்தீர்த்தம்
பூண்டபுதவாரத்துச்சிறப்பெய்துமபுந்தியுறக்
காண்டியெனுங்குரவனுரைகாருர்திமசயிமடுத்தான். ௭௨

இந்திரன்சத்தியவிரதமடைந்துபூசித்தல.

அப்பொழுதேயரசுரிமையம்மறையோன்புடைவைத்துச்
செப்பருஞ்சத்தியவிரதத்திருககரிவைவிரைந்தெய்தி
முப்பொழுதுநீராடிமுழுநீறுமெய்ப்பூசி
மெய்ப்படிகண்டிகைபூண்டுபுண்டரமுமுதலவிளங்க. ௭௩

உருத்திரமுங்கணிததுள்ளப்புண்டரிகத்துமைபாகன்
றிருப்பதங்கள்சிந்தித்துககோயிலினுடசென்றெய்து
யருத்தியொடும்பூசனைசெய்தாராமைமகள்கொள்ளப்
பெருத்தெழுந்தபேரன்பிற்பெருமானைத்துதிககினுறுன். ௭௪

இந்திரன்துதித்தல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மறைமுடிவினனுந்தேறுமலர்சிலம்படியாய்போற்றி
யறைபுனலுலகமெல்லாம்படைத்தளித்தழிப்பாய்போற்றி
சிறைநிறைவாசமதெண்ணீர்ச்சத்தியவிரதத்தீர்த்தத்
துறைகெழுவரைப்பின்மேயசுந்தரவிடங்காபோற்றி. ௭௫

அண்ணலேவிடயததுன்பமுற்றிலேனேலமோலம்
மெண்ணருமயோனிதோறுந்திரிந்தலேன்தெய்வதேனேலம்
கண்ணினுண்மணியேவேறுகண்டிலேன்களைகணேலம்
புண்ணியமுதலேயின்பப்பூரணவோலமோலம். ௭௬

புழுப்பொதிந்தசும்புபாயுமபுன்புலையுடலேயோம்பிக்
கழித்தனன்காலமெல்லாங்கடையனேன்பொறிகள்யாண்டு
மிழுத்திழுத்தலைப்பநொந்தேனினித்தினைப்பொழுதுமாற்றேன்
சழக்கறுத்தருள்வாயுன்றன்சரணமேசரணமையா. ௭௭

இந்திரனுக்குசத்தியவிரதர்காட்சிகொடுத்தருளுதல்.

அடைக்கலமடியேனென்றென்றழுதிரந்தயருங்காலை
விடைத்தனிப்பெருமானன்னோன்பத்தியின்விளைவுநோக்கி
நடைப்பிடியுமையாளோடுநண்ணிநீவேண்டிற்றென்னை
யெடுத்துரைதருதுமென்றானிந்திரன்றொழுதுவேண்டும். ௭௮

வினைவழிப்பிறந்துவீந்துமெலிந்தகாளெல்லேயில்லே,
யனையுவற்றடிகேளுன்றனடிதொழப்பெற்றிலேனு
னினைவருந்தலத்தாலின்றுநின்னருட்குரியனனே
னினிவரும்பிறவிமாற்றியென்றனையுய்யக்கோடி.

இத்தலந்தீர்த்தமென்றன்பெயரினுனிலகவேண்டு
மத்தனேயென்னலோடுமவ்வகையருளிமீளா
முத்திசேர்கணநாதர்க்குமுதல்வனுந்தன்மைநல்கிப்
பைத்தபாம்பாரம்பூண்டபண்ணவனிலிங்கத்தானன்.

அற்றைநாண்முதலச்சூழலிந்திரபுரமாமங்கட்
கற்றைவார்சடையீரோர்காற்கண்ணுறப்பெற்றோர்தாமும்
வெற்றிவேற்காலன்றன்பால்விரவிடார்கருவிலெய்தா
ரிற்றதன்பெருமைமுற்றும்யாவரேயியம்பவல்லார்.

சத்தியவிரதங்காரைத்தருவனஞ்செறிதலாலே
சித்திசேர்ந்தவர்க்குநல்குந்திருநெறிக்காரைக்காடென்
றித்திருப்பெயரினேங்குமென்பரான்மாசுதீர்ந்த
வுத்தமக்கேள்விசான்றவுணர்வுடையும்பர்மேலோர்.

திருநெறிக்காரைக் காட்டுப்படலம்முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௯௦௧

## புண்ணியகோடீசப்படலம்.

கலிநிலைத்துறை.

செச்சைச்சடையந்தணிர்தேமலரோடைசூழ்ந்த
மெய்ச்சத்தியமாவிரதத்தலமேன்மைசொற்றுங்
கச்சிப்பதியிற்கவர்புண்ணியகோடிமேன்மை
நச்சிப்புகல்கின்றனநன்குமதித்துக்கேண்மின். ௧

மின்பாய்பொழிற்சத்தியமாவிரதத்தலத்தின்
றென்பாலதுபுண்ணியகோடிநந்தேவன்வைப்பு
வன்பாலர்களெய்தரும்புண்ணியதீர்த்தமாடே
யென்போலிகட்குஞ்சிவப்பேறெளிதெய்துமங்கண். ௨

சிவபெருமானிடத்துவிஷ்ணுவரம்பெறுதல்.

மலர்மேயவன்மேகநல்வாகனகற்பமொன்றிற்
றலமேம்புகழ்நாரணன்றாமரையாளியாதி
யுலகேழையுமீன்றிடுமாசையினும்பர்கோனைப்
பலநாண்முகிலினுருக்கொண்டுபரித்தல்செய்தான். ௩

நம்மானிரங்கிக்கடைக்கண்ணருணல்கிமாலோய்
வம்மோசுரராண்டினிலாயிரவாண்டுமெற்றிங்
கிம்மேகவுருக்கொடுதாங்கினையெம்மைவேண்டு
மம்மாவரநல்குதுமோதுதியென்னவன்னோன். ௪

எந்தாயொருநின்திருமேனியிடப்புறத்து
வந்தேனடியேனுயர்நின்னருள்வண்மைதன்னு
னந்தாதவிவ்வாழ்க்கையுமெய்தினனஞாலமுற்றும்
பைந்தாண்மலரோனையுமின்றுபடைத்தல்வேட்டேன். ௫

அவ்வாற்றலளித்தருளென்னுமரிக்குஈசனி
னிவ்வாற்றல்கச்சிப்பதியெய்தியிலிங்கத்தாயித்
தொவ்வாகளினங்களிறுயுயர்பூசையாற்றிற்
செவ்வேபெறுகிற்பையெனத்திருவாய்மலர்ந்தான். ௬

விஷ்ணுகாஞ்சியில்சிவபூசைசெய்தல்.

அங்கப்பொழுதேவிடைகொண்டருட்காஞ்சியெய்திப்
பொங்கிப்பொலிதீர்த்தநறும்புனலாடிச்சூழுந்
தெங்கிற்பொலியிந்திரநன்னகர்த்தென்றிசைக்கட்
டுங்கச்சிவலிங்கமிருத்திமெய்யன்புதோன்ற. ௭

தெண்ணீர்த்தடமொன்றுவகுத்துத்திருந்தமூழ்கி
வெண்ணீற்றணியக்கமணிக்கோவைமெய்விளங்கக்
கண்ணீர்க்கமலம்பலகொயதுகருத்துவாய்ப்ப
வண்ணீர்ச்சிவபூசனைநித்தலுஞ்செய்துவாழ்ந்தான். ௮

கஜேந்திரன்தொண்டுசெய்தல்.

வேறு.

அன்னோனவன்மெய்ப்பணியாற்றுமன்புந்தத்
தன்னேரில்லாவோர்மதவேழந்தானெய்தி
யென்னுயகனேயென்பணிகொள்வாயென்றேத்திப்
பொன்வாட்டோன்றுமுன்னரெழுந்துபுனலாடி. ௯

நாளலர்தாமரைபாதிரிவில்வநறும்புன்னை,
தாளுயர்சண்பகமல்லிகைதண்கழுநீர்மௌவல்,
கோளறுகோங்குமுதல்பலகொய்துகொடுத்தென்றும்
வேளையளித்தவனுண்மகிழ்வித்திடுநாளில். ௧௦

கஜேந்திரனைமுதலைப்பற்றல்.

ஓப்பகனீர்நிறைபூந்தடமொன்றுறுபூக்கொய்வான்
சீர்தகுதிண்கரிசேறலுமங்கொருவன்மீன
நீரிடைநின்றுவெகுண்டடிபற்றிநிமிர்ந்தீர்ப்பக்
காரொலிகாட்டியகன்கரையீர்த்ததுகாய்வேழம். ௧௧

இவ்வகைதண்புனலிற்கரைமீதிவையோவாமே
தெவ்வுடனீர்ப்புழிபாண்டுகளெண்ணிலசென்றேகக்
கைவரையாற்றரிதாயலறிக்கருமாமேகத்
தவ்வடிவோனையழைத்ததுமூலமெனக்கூவி. ௧௨

விஷ்ணுகஜேந்திரனைக்காத்தல்.

அண்டரெலாம்யாமூலமலேமென்றகல்போழ்திற்
புண்டரிகக்கட்புண்ணியனன்புள்ளரசின்மேல்
கொண்டெதிரெய்திக்கரியரசெய்துங்கொடுவெங்கோய்
கண்டுளெக்கானஞ்சலேயஞ்சேல்களிறென்னு. ௧௩

ஆழியெறிந்தானதனுயிருண்டான்கரியோடும்
வாழியகாஞ்சிமாநகரெய்திச்சிவபூசை
வேழமளிக்குமேதகுபுள்ளித்தாமத்தா
லூழ்முறையாற்றித்தவநனிசெய்தங்குறைநாளே. ௧௪

எண்ணருவானோரின்னமுநாடற்கரியானைக்
கண்ணிணையாரக்காண்டகுகாதல்கைமிக்கங்
குண்ணிகழன்பானெக்குருகிக்கணுறைசிந்தப்
புண்ணியவேதப்பழமொழியோதிப்புகழ்கிற்பான். கரு

விஷ்ணுதுதித்தல்.

கொச்சகக்கலிப்பா.

நீராய்நிலனாய்நெருப்பாய்வளிவானு
யோராரிருசுடராயுவியாயுாவைக்கும்
வேராகிவித்தாய்விளைவாகியெல்லாமாம்
பேராளாவெங்கள்பிரானேயடிபோற்றி. கசு

அண்டபகிரண்டமனைத்துமகத்தடக்கிக்
கொண்டுநிறைந்தோங்கியபேரின்பக்குரைகடலே
தொண்டரெலாமுண்ணத்தெவிட்டாச்சுவையமிர்தே
தண்டலைசூழ்கச்சித்தலைவாவடிபோற்றி. கஎ

மாறுவறக்கடவுணமான்வடியேனு
மேறுகித்தாங்கவருள்சுரந்தவெம்மானே
சீறுதுமைகளிப்பத்தேவியாக்கொண்டெனைநின்
கூறுட்டுவைத்தகுணக்குன்றேயடிபோற்றி. கஅ

திக்காடையாதியணியோடுதீவினையே
னக்கோடுகண்ணேடுரியென்புணிந்தானே
யிக்காய்மழுமுதலாம்வான்படையோடென்றனையுந்
தக்கோர்புகழ்கணையாக்கொண்டாய்சரண்போற்றி. கசு

மெய்யடியார்சாத்தும்விரைமலர்போலன்பிலாப்
பொய்யடியேனான்விழியுங்கொண்டருளும்பொன்னடியாய்
செய்யானேநந்திகணத்தவர்போற்சேயேனு
மெய்தியருட்கூத்தினியமுழக்கும்பேறளித்தோய். உ0

ஆலமுளக்கரெழுமந்நாளடைக்கலமென
றோலமிடுமெங்கட்குயிரளித்தசீராளா
காலமேகாலங்கடந்தபெருங்கருணைக்
கோலமேயானந்தக்குன்றேயடிபோற்றி. உக

விஷ்ணுவுக்குசிவபெருமான்காட்சிகொடுத்தருளுதல்.

கலிவிருத்தம்.

என்னப்பலபன்னியிரந்தயரும்
பொன்னுக்கிறைமேலருள்பொங்கியெழ
மின்னற்சடையோன்விடைமீதுவரை
யன்னத்தொடுகாட்சியளித்தனனால். உஉ

கண்டானிருகண்களிகூரமகிழ்
கொண்டான்வழியோன்கொழிதெள்ளமுத
முண்டானெனவோடினனாடினனால்
வண்டாமரைமாதுமணாளனரோ. உங

அதுகண்டுமைபாலருணேக்குதவி
விதுவொன்றுபொலஞ்சடைவிண்ணவனோர்
முதிருங்குறுமூரன்முகத்தலர
மதுசூதனகேட்டிவரந்தருகேம். உச

நரர்வானவர்தம்மினுகாரணநீ
பெருவான்வலிபெற்றனையெம்மருளாற்
பொருபோரினுளெம்மினும்வென்றிபுனை
வரமெம்மிடைமுன்பெறுமாதவனே. ௨௫

எனவங்கருள்செய்தலுமிந்திரைகோன்
மனமொன்றவணங்கிவணங்கியெழுந்
தனதம்புயபாதயுகத்தடியேற்
கனகம்பெறுபத்தியளித்தருளாய். ௨௬

வரதாமரையோனெடுமேற்றலகும்
வரதாதரல்வேட்டமனத்தினையாய்
வரதாவரமீதவழங்குதிநீ
வரதாவெனவோதியழுத்தினனும் ௨௭

நின்னசைநிரம்பவரங்கவொடு
மின்னேகொளநலத்தினைமேனிறைமா
மனனுபலகாலவரதாவெனநீ
சொன்னயெமையன்புதுளும்புறவே. ௨௮

வாசத்துளவோயினிநீவரத
ராசப்பெயராற்பொலிவாயெமதாள்
பூசித்தனைபுண்டரிகங்களினாற்
பேசிற்பதுமாக்கனெனப்பெறுவாய். ௨௯

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

என்றருள்புரிந்தவள்ளலிணையடிவணங்கிமாயோன்
வென்றிவெள்விடையாயின்னும்விண்ணப்பமொன்றுகேட்டி
நின்றிருப்பாதபூசைநித்தலுமடியேனாற்ற
நன்றுதிவ்வுத்தியேவற்பணிநயந்தொழுகிற்றன்றே. ௩0

என்னிடையன்புசாலப்பூண்டதாலிதன்பேர்தன்னா
லுன்னெதிரடியேன்வாழுமுயர்வரைக்குடுமியோங்கன்
மன்னுசீருலகினத்திகிரியெனவழங்கல்வேண்டுங்
கன்னலஞ்சிலைவேளாங்கனல்விழிக்குதவவல்லோய். ௩௧

புண்ணியதீர்த்தப்பொய்கைப்புனல்படிந்திங்குளார்செய்
புண்ணியமொன்றுகோடிமடங்குறப்புரிந்துமற்றிப்
புண்ணியகோடிவைப்பினுயிர்க்கெலாங்கருணைபூத்துப்
புண்ணியகோடிநாதலிங்கத்திற்பொலிகநாளும். ௩௨

அடியனேன்றண்டாதென்றுநின்னெதிரமர்ந்துபோற்றக்
கடிகெழுகற்பத்தண்டார்க்கடவுளர்முனிவர்யார்க்கு
முடிவறுவரங்கணல்கிமுழுதருள்சுரந்துவாழி
கொடியவெஞ்சீற்றத்துப்பிற்கூற்றுயிர்ப்பருகுந்தாளோய். ௩௩

அண்ணலேயென்றுவேண்டவவற்கவையருளியெங்கோன்
புண்ணியகோடிநாதலிங்கத்துட்புக்கானந்நாட்
கண்ணுதற்பரனைமாயன்காருருக்கொண்டுதாங்கும்
வண்மையாற்கற்பமேகவாகனப்பெயர்பூண்டன்றே. ௩௪

புண்ணியகோடீசப்படலமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௫௩௪.

# வலம்புரிவிநாயகப்படலம்.

கலிவிருத்தம்.

நலம்புரிபுண்ணியகோடிநாதர்தம்
புலம்புரிபெருமையைப்புகன்றுளேமினி
நிலம்புரிதவத்தினீரத்திநீள்வரை
வலம்புரிவிநாயகன்மாட்சிசெப்புவாம். ௧

முன்னொருநாளயனரிமுனிவர்வானவர்
கின்னரரோரிடைக்கெழுமித்தங்களுட்
பன்னுதலுற்றனர்படிறர்செய்வினை
யங்கிலையூறின்றியமுகின்முற்றுமால். ௨

அங்கவர்தமக்கிடையூற்றையாக்கவு
நங்களுக்கூறுதீர்த்தினிதுநல்கவு
மிங்கொருகடவுளைப்பெறுதற்கெம்பிரான்
பங்கயத்திருவடிபழிச்சிவேண்டுவாம். ௩

விக்கினமகலவிண்ணவர்வேண்டல்.

என்றுளந்துணிந்தனரெய்திமந்தரக்
குன்றமீதெம்பிரான்கோயிலுள்ளுறுச்
சென்றனர்தொழுதனர்செவ்விநோக்கிமுன்
னின்றனர்மறைகளாற்றுதிநிகழ்த்தினர். ௪

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சற்றிதுதிருவுளஞ்செய்துகேட்டருளுதிதலைவனேவெங்
குற்றமேதுறுமனத்தானவக்கொடியவர்தொடங்குசெய்கை
முற்றுறாதூறுபட்டழியவுமெம்மனோர்முயன்றசெய்கை
யிற்றுறாதூறுதீர்ந்தாகவுங்கருணைசெய்யெனவிரந்தார். ௫

விநாயகர்திருவவதாரம்.

அம்மொழிசெவிமடுத்தருள்புரிந்தகிலமுமுய்யுமாற்று
லிம்முறைபுரிதுமென்றவர்க்கெலாம்விடையளித்தெழுந்துபோந்து
கொம்மைவெள்விடையினன்சித்திரச்சாலையைக்குறுகியங்கட்
செம்மைசால்சித்திரம்யாவையுநோக்கினன்றேவியோடும். ௬

வானகத்தச்சனலகிலமுஞ்சித்திரித்தெழுதிவாய்ந்த
வூனமில்சாலையுளெழுதுமாமனுக்களோடுபமனுக்க
ளானவெல்லாமுமைக்கெம்பிரான்காட்டுபோதவற்றுளாதித்
தானமாரிருவகைப்பிரணவமனுக்களைத்தையல்கண்டாள். ௭

உவகையாற்பற்பல்காணுக்கியிங்கிவையெவையுரைத்தியென்னச்
சிவபிரான்றேவியைத்தழீஇயினன்கூறுவான்செல்விகேட்டி
தவலிலிப்பிரணவமதுகாண்மூவரைத்தந்ததாகு
நவிலின்மற்றதுநினதாகுமுச்சத்தியைநல்குமூலம். ௮

மும்மறைமுதலெலாமீன்றிடுமிருமுதுகுரவரான
விம்மனுக்கரியொடும்பிடியெனத்தோன்றலினிவைகளாகி
யம்மநாம்புணர்துமென்றவ்வுருக்கொண்டனராடுகாலைச்
சும்மைநீருலகெலாமுய்யவந்துதித்தனன்றோன்றலன்றே. ௯

கயமுகப்பிள்ளையையிருவருங்காதலாலெடுத்தணைத்து
வயமுறமடித்தலத்திருத்திமெய்க்கலன்பலவணிந்துவாழ்த்த
வியலபுடைப்புதல்வனுமுழங்கையாலெழுந்தெதிர்கடித்தல்செய்தா
னயனமாக்களிகொளநோக்கினளுலகெலாமீன்றநங்கை. ௧0

அங்கையானைத்திகின்றுடல்கண்டகங்களிதுளும்பியையன்
பங்கயப்பதந்தொழுதிறைவநீபயந்தசேயிவனையின்னே
யெங்குளகணங்களும்பல்கணநாதருமெவருமேத்தத்
துங்கமாமிறைமையீந்தருளெனவேண்டலுஞ்சூலபாணி. ௧௧

கடவுளர்முனிவரரயனரிபலகணநாதரெல்லா
முடன்வரத்திருவுளஞ்செய்தழைத்தோதுவான்மடித்தலத்தி
மிடலுடைச்சிறுவனையிருத்திமற்றிங்கிவன்வெற்பின்வந்த
மடமயிற்கினியவன்யாம்பெறுமூத்தமாமைந்தனோர்மின். ௧௨

இவனையிவ்வுலகெலாந்தொழுதெழுமிறைமையினிருத்துகின்றேங்
குவிமுடிசூட்டுவான்வேண்டுபகரணங்கொணர்மினென்றே
யவரவைகொணர்ந்தபின்மைந்தனைமடங்கலாதனத்தினேற்றிச்
சிவபிரான்றிருவபிடேகநீராட்டினன்மகுடஞ்சேர்த்தான். ௧௩

அரசினுக்குரியநலலணிகளாலலங்கரித்தும்பர்கூரப
பிரமனைமாயனைத்தேவரைமுனிவரைப்படைப்பினோக்கி
யுரனுடையுமகெலாநாயகனிவனிடையூறுனுக்குங்
கரவிலாநாயகனெனாம்வைத்தனங்கண்டுகொண்மின். ௧௪

தீயவத்தானவர்க்கூறிழைப்பானிவனென்றுமசெப்புந்
தூயவன்வாய்மொழிதலைமிசைக்கொண்டனர்துதித்திறைஞ்சி
மாயவன்முதலியோர்கணேசனைவணங்கினர்கையுறைக
ளேயுமாறுதவினர்விடைகொடுத்ததமதிருக்கைசேர்ந்தார். ௧௫

விநாயகர்திருவிளையாடல்.

கலிவிருத்தம்.

பொருவருந்தடநெடும்புழைக்கையேந்தலு
மிருமுதுகுரவர்தாளிறைஞ்சிமேவுதா
ளொருவருங்கணங்களோடுலவிமையகனுந்
திருவிளையாடலிற்சிந்தைவைத்தனன். ௧௬

ஒளித்துநின்றுடன்பயிலுழைச்சிறார்மிசைத்
தெளித்தெழுபுழைக்கைநீர்த்திவலைதூவியிது
துளித்ததுமுகிலெனச்சொலவியுள்ளகங்
களிப்பவான்கருமையைக்காட்டிவஞ்சித்தும். ௧௭

புழைக்கையின்மோந்துயிர்ப்பெறிந்துபூமியைக்
குழித்துமுன்னணிந்தனபழமைகூர்ந்தவெண்
மெருழித்தகல்பாதலந்துரகம்யாவையு
மிழுத்தெடுத்தணியெனப்புயத்திலேற்றியும். ௧௮

ஒன்பதுகோள்களுமுடுக்கணங்களுந்
துன்பறப்பிணித்தசைதுருவசூத்திரம்
வன்பனைக்கரத்தினும்பறித்துமார்பிடை
யன்பமர்கவமணியாரமாக்கியும். ௧௯

என்னைநீர்கண்டெடாதிருப்பதென்னெனப்
பன்னகமெவற்றையுங்கனன்றுபற்றிவான்
மன்னிடவீசியங்குடைந்தவானதி
தன்னுடைத்தந்தைபோற்சடிலத்தேந்தியும். உ0

கலிநிலைத்துறை.

இவ்வகைப்பலசிறுகுறும்பெங்கணுமியற்றிக்
கௌவைநீர்விளையாட்டினிற்காதலனொருநாட்
பௌவம்யாவையுமுழக்கினன்பாற்கடல்புகுந்தான்
கொவ்வைவாயுமைபயந்தருள்குஞ்சரக்குரிசில். உக

புகுந்துவெள்ளநீர்முழுவதும்புழைக்கையின்மடுத்தான்
மிகுந்தபன்மணிநீருறையுயிர்கள்வெம்பணிக்கோன்
முகுந்தனுந்தியன்றிருந்தநான்முகப்பிரான்முகுந்தன்
சகுந்தமன்னவன்றிருவுமப்புழைக்கையுட்சார்ந்தார். உஉ

வறுங்கடற்பரப்பகட்டினிலெஞ்சுகூர்பங்க
ளுறுங்கரும்பெருஞ்சேற்றிடையாழிப்பனமுன்னு
ணறுந்துழாயணியாமையைநலிவுறப்பற்றிக
குறும்படக்கியபிரான்வருதிறங்குறித்தனபோல. உஙு

மாயமீன்விழிபறித்தவன்முன்வருமிளவன்
மேயவாறுகண்டனவெனத்துடிப்பனசிலமீன்
பாயபூம்புனலரசனம்பனுககிடுந்திறைபோற்
சேயபன்மணிவயின்றொறுமிமைப்பனசிலவே. உச

ஐயன்வார்செவிக்காற்றினிலலைகண்மிகவெறிந்து
வெய்யபேரொலிகாட்டுவெறிவியன்கடல்கண்
மையகற்றதங்கிளைவறங்கூர்ந்தமைகாணூஉக
கையெறிந்தழுதிரங்கிவீழ்ந்தரற்றுவகடுக்கும். உரு

இன்னவாறுபாற்கடலவறந்தழிவுறவிருங்கை
தன்னிலேற்றநீர்மீளவுந்தரைமிசைவிடுத்தா
னன்னநீருடன்வீழ்ந்தனரயனரிமுதலோர்
துன்னுநீபடுதுரும்பெனத்திசைதொறுஞ்சிதறி. உசு

பின்னரோரிடைத்திரண்டுடன்குழீஇயினர்பெரிது
மின்னலுற்றமைதத்தமுடபேசினரெளியோ
முன்னைநல்வினைப்பயத்தினுலின்றுமுதுலகந்
தன்னிலவந்தவாறுபிறப்பெனமதித்தனரால். உஎ

விஷ்ணுபாஞ்சசன்னியமிழத்தல்.

மருட்சிதீர்ந்தபின்மாயவனிடக்கையின்வழுவு
முருட்சிகூர்ந்தவெண்சங்கினைக்காண்கிலனுயங்கி
வெருட்சிகொண்டனன்றேடினன்வியன்றிசைப்புறத்துத்
தெருட்சிகொண்டதுவொலிப்பதுகேட்டனன்செவியில். உஅ

ஓசையாலதுபாஞ்சசன்னியமெனவுணர்ந்தவ்
வாசையிற்சிலர்தமைச்செலவிடுத்தனனவர்போய்
மாசிலேங்கரப்பிரான்கணம்வாயிடைக்கொண்ட
வேசறுஞ்சுரிமுகத்தினைக்கண்டுமீண்டுரைத்தார். உகூ

